# கபில்தேவ்

● 'நடக்கவே நடக்காது' என்று பலர் கருதிய விஷயத்தில் 'நடக்கும்' என்று உறுதியான நம்பிக்கை வைத்த கபில், பாரதத்தின் இளைய தலைமுறைக்கு வழிகாட்டியாகிறார். ஜிம்பாப்வேக்கு எதிராக நமது அணி 14 ரன்களுக்கு 4 விக்கெட், 17 ரன்களுக்கு 5 விக்கெட் என்ற பரிதாப நிலையில் இருந்த போது அரங்கில் நுழைந்த கபில், 175 நாட் அவுட்டாக இருந்து ஆடியது சாகா வரம் பெற்றுவிட்ட சாதனை. இதன் பின் விளைவாக இறுதியில் உலகக் கோப்பையே கபிலின் கரங்களை அலங்கரித்தது. 1980-81ல் மெல்போர்ன் டெஸ்ட் இரண்டாவது இன்னிங்ஸில் ஆஸ்திரேலியாவுக்கு எதிராகப் பந்து வீசிக் கபில்தேவ் நிகழ்த்திய அற்புதத்தைத்தான் யாரால் மறக்க முடியும்? இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகளை அடுக்கிக்கொண்டே போகலாம்.

கபில்தேவ் நிகன்ஜ் வாழ்க்கையில் என்றுமே ஏமாற்றத்தை எதிர் கொண்டதில்லை. சாமானிய ரசிகனுக்குக்கூட வெட்ட வெளிச்சமாகுமாறு அவரது ஆற்றல் மாணவப் பருவத்திலேயே பிரகாசித்தது. பல்கலைக் கழக மாட்சுகளிலும் 22 வயதுக்கு உட்பட்டோர் ஆடும் மாட்சுகளிலும் தமது அசாதாரண ஆற்றல் விகசிக்கச் செய்தார். அவரது போலிங் திறமை பஞ்சாப் பல்கலைக் கழகத்தைக் கிரிக்கெட்டில் முன்னணிக்குக் கொண்டு வந்தது. வடக்குப் பிராந்திய பல்கலைக் கழகங்களுக்கு விஸி டிராஃபியைப் பெற்றுத் தந்தது. அந்தக் காலகட்டத்தில் அவர் ஒரு சமயம் ஓர் இன்னிங்ஸில் 327 ரன்கள் எடுத்து, 'இதோ ஒரு டெஸ்ட் வீரர் உருவாகிறார்' என்று அனைவரையும் உணரச் செய்தார். கபிலுடைய திறமை ஒவ்வொரு கால கட்டத்திலும் பாராட்டுக்கு உள்ளாகி வளர்க்குவிக்கப்பட்ட ஒன்று.

அவருக்குத் தலைமை தாங்கும் திறமையும் இருப்பதை 'செலக்டர்கள்' சீக்கிரமே உணர்ந்து கொண்டனர். தலைமைப் பொறுப்பை ஏற்றால் ஆட்டத் திறன் பாதிக்கப்படும் என்ற சம்பிரதாயக் கருத்தை ஒதுக்கித் தள்ளி, தேர்வாளர்கள் தீர்க்கதரிசனத்துடன் நடந்து கொண்டதன் மூலம், தேசத்தின் நன்றியையும் பாராட்டுதலையும் பெறுகின்றனர்.

உலகம் போற்றும் ஆல் ரவுண்டர்களான ஐயான் போதம், இம்ரான்கான், ரிச்சர்ட் ஹாட்லி ஆகியோருக்கு இணையாக இன்று மதிக்கப்படுகிறார் கபில்.

-ராம்நாராயண்

வண்ணப்படம்: பாலாஜி



ஸ்வஸ்திகா

ஹிட்லரின் குறியீடு என்ற முறையில் பிரபலமான ஸ்வஸ்திகா மிகவும் புராதனமானது; புண்ணியமானதும் கூட.

ஸ்வஸ்திகா என்னும் சம்ஸ்கிருதச் சொல்லுக்கு நல்வாழ்வு என்று பொருள்.

ஸ்வஸ்திகா எனப்படும் இந்த இலச்சினை கடந்த எட்டாயிரம் ஆண்டுகளாக ஆரியர்கள் மற்றும் சநாதன தர்மத்தினரின் குறியீடாக அவர்களது நாகரீகத்தையும் கலாசாரத்தையும் பறைசாற்றிக் கொண்டு விளங்குகிறது.

''பரம்பொருளே!

எங்களுடைய வாழ்க்கையில் ஒவ்வொரு பிரிவிலும் உங்களுடைய வழியைக் காட்டுங்கள்—

எங்களுடைய காரியங்கள் வெற்றி பெறவும் பூரணத்துவம் பெறவும் அருள்கூறுங்கள்''

—என்று பிரார்த்தனையைச் சொல்லாமல் சொல்லுகிறது இந்தச் சின்னம்.

—விசித்ரி

''எனக்கு எழுதத் திறமையில்லை என்று அறிந்து கொள்ளப் பதினைந்து வருடங்களாயின. ஆனால் எழுதுவதை விட முடியவில்லை. காரணம் அதற்குள் நான் மிகவும் பிரபலமாகி விட்டேன்!'' என்றவர் ராபர்ட் பென்சிலி.

—கோகு



# அமைச்சர் என்று அறிந்த போது...

(புதிதாக நியமிக்கப்பட்ட மூன்று தமிழக அமைச்சர்களுக்கும் கல்கி சார்பில் வாழ்த்து கூறிவிட்டு நீங்கள் அமைச்சராக நியமிக்கப்பட்டதை எப்படி அறிந்து கொண்டீர்கள் என்று கேட்டபோது...)

**பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் திரு. கோவேந்தன்**

எனது ஊரான பேராவூரணியில் இருந்தேன். மதியம் மணி இரண்டரை இருக்கும். நாகப்பட்டினம் போலீஸ் கண்ட்ரோல் ரூமிலிருந்து 'என்னை உடனடியாகச் சென்னைக்கு வரச் சொல்லி முதல் அமைச்சர் அலுவலகத்திலிருந்து தகவல் வந்திருக்கிறது' என்று கூறினார்கள். வழக்கப்படி ஏதாவது சுற்றுப் பயணம் பற்றி விவாதிக்கவோ, அல்லது எனது தொகுதியில் உள்ள சில விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவோ கூப்பிடுகிறார்கள் என்று நினைத்து மறுநாள் போய்க் கொள்ளலாம் என்றிருந்தேன். சிறிது நேரத்திற்குப் பின் தஞ்சை போலீஸ் கண்ட்ரோல் ரூமிலிருந்து 'நீங்கள் எந்த வழியாகச் சென்னை செல்கிறீர்கள்?' என்பதைத் தெரிவிக்கவும் என்று தகவல் வந்தது. அப்போதுதான் ஏதோ அவசர விஷயம் போலிருக்கிறது என்று எண்ணி 'திருச்சி வழியாகப் போகிறேன்' என்று கூறிவிட்டு உடனடியாக திருச்சி விமான நிலையத்திற்கு விரைந்தேன். டிக்கட் வாங்கிவிட்டு வந்து சற்று உட்கார்ந்தேன். ஒரு பெரியவர், மாலை நாளிதழுடன் அருகில் வந்தார். 'நீங்கள்தானே கோவேந்தன். அமைச்சராக நியமிக்கப் பட்டிருக்கிறீர்கள்' என்றார். பேப்பரைப் பார்த்தேன். சாதாரணத் தொண்டனை மதித்து பதவி தந்த புரட்சித் தலைவரின் பெருந்தன்மை என்னை நெகிழச் செய்தது.

**மீன் வளத்துறை அமைச்சர் குடந்தை எஸ். ஆர். ராதா**

எனது மகனுக்கு சாந்தோமில் உள்ள ஒரு பள்ளியில் அட்மிஷன் விஷயமாக புலமைப்பித்தனைப் பார்க்கச் சென்றிருந்தேன். அவர் வீட்டிலிருந்து பள்ளி தலைமையாசிரியரைத் தொடர்பு கொள்ள அவர் மதியம் இரண்டு மணிக்கு வாருங்கள் என்று கூறிவிட்டார். புலமைப் பித்தனுடன் பேசிவிட்டு வீட்டிற்கு வந்தேன். பின்பு ஒரு போலீஸ் கேஸ் விஷயமாக கமிஷனர் அலுவலகத்தில் துணைக் கமிஷனர் திரு காசிம் அவர்களைச் சந்தித்து விட்டு ஒரு மணி வாக்கில் வீட்டிற்கு வந்தேன். சட்ட மன்ற உறுப்பினர் திருமாறன் அவர்கள் எனக்காகக் காத்திருந்தார். நான் ஸ்கூட்டரிலிருந்து இறங்கியதும் 'வாழ்த்துக்கள்' நீங்கள் அமைச்சராக்கப்பட்டிருக்கிறீர்கள்' என்றார். 'சும்மா விளையாடாதீர்கள்' என்றேன். பிறகு முதல்வர் அலுவலகத்திலிருந்து தொலை பேசி வந்தது. விஷயத்தை உறுதிப்படுத்திக் கொண்டு, அப்போதே சென்று முதல்வரைச் சந்தித்தேன். 'சாப்பிட்டு விட்டுப் போங்கள்' என்றார் முதல்வர்.

இலையில் மீன் சம்பந்தப்பட்ட பதார்த்தங்கள் நிறைய இருந்தன. சாப்பிட்ட பிறகு முதல்வர் கூறினார்: 'உங்களிடம்தான்- மீன் வளத் துறை இலாக்காவை ஒப்படைக்கப்போகிறேன்'!

**கதர்த் துறை அமைச்சர் செல்வி விஜயலட்சுமி**

எனது தொகுதி வேலையாக அன்று சென்னைக்கு வந்திருந்தேன். மதியம் பன்னிரண்டு மணி இருக்கும். தினத் தந்தி அலுவலகத்திலிருந்து தொலை பேசி வந்தது. 'நீங்கள் அமைச்சராக நியமிக்கப்பட்டிருக்கிறீர்கள்' என்று கூறி எனது இலாகாவையும் கூறினார்கள். பிறகு நானே முதல்வர் அலுவலகத்துடன் தொடர்பு கொண்டேன். மறு நாள் காலை தோட்டத்திற்குச் சென்று அவரிடம் ஆசி பெற்றேன்.

—நமது நிருபர்கள்

புகைப்படங்கள்: சுபா; தமிழ்நாடு செய்தித்துறை



○ கோவேந்தன்



○ எஸ். ஆர். ராதா



○ விஜயலட்சுமி








''என் குழந்தைகள் அலுக்காமல்
அரும்பாடுபட்டுப் படிக்கிறதையும்,
ஆர்வமுடன் விளையாடுவதையும்
பார்த்தால் வியப்படைவீர்கள்.
அதற்குத் தேவையான வற்றாத தெம்பு
அவர்களுக்கு விவாவிலிருந்து
கிடைக்கிறது. பார்லி, கோதுமை
இவற்றின் மால்ட் சத்துக்கள்,
பால், வைட்டமின்கள் அடங்கிய
விவா ஜீரணிக்க எளிதானது.
பாலிலேயும் சரி, நீரிலேயும் சரி
கலக்க இலகு. சூடான பானமாகவோ,
குளிர் பானமாகவோ சுவையுடன்
அருந்தலாம். அலுக்காமல்
படிக்கவும் விளையாடவும் சளைக்காத
தெம்பு— தருகிறது விவா''

**"தெம்பு தரும் விவா
உனக்கு நன்றி!"**




ASP/JIL: V/2/2015 TM



மாண்ட் (உலக) தேர்வில் வெள்ளிப்
பதக்கம் வென்றது, ஆம்ஸ்டர்டாம் 1981

**JiL** ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

# வருகிறது கல்பாக்கம் மின்சாரம்



※ கல்பாக்கம் அணுமின் நிலையம் வெளித்தோற்றமும், யுரேனியம் குழாய்களும்

ஒரு வழியாக கல்பாக்கம் அணுமின் நிலையத்திலிருந்து மின்சாரம் உற்பத்தியாகி, தமிழ் நாடு மின் துறைக்கு ஒன்றிரண்டு மாதங்களில் வழங்கப்படும் என்ற செய்தி சில நாட்களாக அடிபடுகிறது. சென்னைக்குத் தெற்கே அமைந்துள்ள இந்தக் கல்பாக்கம் அணுமின் நிலையத்தில் அணு சக்திப் பொருள் அடங்கிய யுரேனியம் கொண்ட குழாய்களை நிறுவுதல், கன நீரை நிரப்புதல் போன்ற முக்கிய பணிகள் முடிவடைந்துவிட்டன.

செப்டம்பர் மாத வாக்கில் வர்த்தக ரீதியில் செயல்படத் துவங்கி, தமிழ்நாடு மின் தொகுப்புக்கு மின்சாரத்தை வழங்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

**அணுமின் நிலையம் எப்படி இயங்குகிறது?**

அணுமின் நிலையத்தின் மூலப் பகுதியான அணு உலையில் கருப் பிளவு தொடர் இயக்கம் ஆரம்பித்து விட்டால் மின் நிலையம் இயங்கத் தொடங்கி விட்டதாக அர்த்தம். (அணு சக்திப் பொருளான யுரேனியத்தில் அடங்கியுள்ள அணுக்களில் கருப் பிளவு ஏற்பட்டுச் சக்தி வெளிப்படும். இதுதான் அணு சக்தி. கட்டுப்படுத்தப்பட்ட நிலையில், யுரேனிய அணுக்களில் கருப் பிளவு ஏற்படும் போது பெரும் வெப்பம் ஏற்படும். இந்த வெப்பத்தினால் தோற்றுவிக்கப்படும் நீராவி மின் உற்பத்திக்கான 'டர்பைன்களை இயக்கும்; இதன் மூலம் மின்சாரம் கிடைக்கும்.) கருப் பிளவு தொடர் இயக்கம் எப்போது ஆரம்பிப்பது என்பது என்ஜினீயர்கள்தான் முடிவு செய்வார்கள்.

யுரேனியம் அடங்கிய குழாய்களை ஒரு தடவை அமைத்து விட்டால் நீண்ட காலத்துக்குக் கவலை இல்லை. தொடர்ந்து மின் உற்பத்தி நிகழ வசதியாயிருக்கும்.

கல்பாக்கம் அணுமின் நிலையத்தின் முதலாவது யூனிட்தான் இப்போது மின் உற்பத்தியில் ஈடுபடப் போகிறது. இதன் திறன் 235 மெகாவாட். இதை அமைப்பதற்கான செலவு திட்டத் தட்ட 250 கோடி ரூபாய். இதே திறன் கொண்ட இன்னொரு யூனிட் அமைக்கும் பணி அடுத்த வருடக் கடைசியில் முடிவடைந்து, அதுவும் அப்போது செயல்படத் துவங்குமாம்.

இனி கொஞ்சம் பின்னோக்கிப் போனால்தான் இந்த அணு மின் நிலையத்தின் முழு உருவத்தையும் பார்க்க முடியும்.

இருபத்தைந்து ஹெக்டேர் பரப்பில் அமைந்துள்ள அணுமின் நிலையத்தில் சுமார் ஆயிரம் விஞ்ஞானிகளும், ஊழியர்களும் பணியாற்றுகிறார்கள். சென்ற வருடம் ஜனவரி மாதமே தயார் நிலையில் இருந்த இந்த நிலையம், முக்கியமான அடிப்படைப் பொருளான கனநீர் (Heavy water) கிடைக்காமல் மின் உற்பத்தியைத் துவக்க முடியாமல் தூங்கிக் கிடந்தது. ''இந்த நிமிஷம் கனநீர் கிடைத்தால் மறு நிமிஷமே உற்பத்தி துவங்கி விடுவோம்!'' என்ற அதிகாரிகளிடம் ''எப்போது சார் கிடைக்கும் கனநீர்?'' என்று கேட்க முடியவில்லை. அமெரிக்கா தருமா, பிரான்ஸ் தருமா, கனடா தருமா என்று கையை நீட்

டிக் கொண்டிருந்ததில் அவர்கள் சாக்குப் போக்குத்தான் சொன்னார்களே தவிர சரக்குத் தரவில்லை! கேட்டால் — அரசியல் காரணங்கள். 1974ல் போக்ரான் என்னுமிடத்தில் இந்தியா சோதனையாக அணுகுண்டு வெடித்த பிறகு, கல்பாக்கம் நிலையத்துக்குக் கனநீர் தருவதாக முதலில் ஒப்புக் கொண்டிருந்த கானடா, அணு சம்பந்தமான உதவிகளை எல்லாமே அறவே நிறுத்திக் கொண்டது நினைவிருக்கலாம். அப்புறம் உள் நாட்டிலேயே கனநீரைத் தயாரிக்க ஆரம்பித்தார்கள். கல்பாக்கம் அணு மின் நிலையத்தை இயக்க 255 டன் கன நீர் தேவைப்படுகிறது — வருடத்துக்கு. (பல்வேறு கோளாறுகள் காரணமாக, தூத்துக்குடியிலும் பரோடாவிலும் அவற்றின் மொத்த உற்பத்தித் திறனில் பாதி கூடத் தயாராவதில்லை. ராஜஸ்தானத்தில் உள்ள கோட்டாவிலும் ஒரிசாவில் உள்ள தால்சேரிலும் இப்போதுதான் உற்பத்தியைத் துவக்கியிருக்கிறார்கள்) ''இங்கே போதுமான கனநீர் இப்போது எங்களிடம் இருக்கிறது'' என்று கல்பாக்கத்தில் உயர் அதிகாரி ஒருவர் செய்தியாளர்களிடம் தெரிவித்திருக்கிறார்.

கல்பாக்கம் நிலையம் நம் நாட்டிலேயே தயாரிக்கப்படும் கனநீரைப் பயன்படுத்திக் கொள்ளும் விதமாகத்தான் மாற்றி அமைக்கப்பட்டுள்ளது. முழுக்க முழுக்க இந்திய விஞ்ஞான தொழில் நுணுக்கங்களை அடிப்படையாக வைத்து உருவான கல்பாக்கம் அணுமின் நிலையத்தில் ஒரு சதவீதத்துக்கும் குறைவாகத்தான் வெளி நாட்டுச் சரக்கு உபயோகிக்கப் பட்டுள்ளது. (ஆரம்பத்தில் இருபது சதவீதம் இறக்குமதிச் சரக்கு தேவைப்படும் என்று எதிர்பார்க்கப் பட்டதாம்.)

பல நவீன வசதிகளுடன் இதை நிறுவுவதில் இந்திய விஞ்ஞானிகள் பங்கு மகத்தானது என்று தெரிகிறது. இரட்டை ஷெல் கூடார அமைப்பு உலகிலேயே முதல் முறையாக இங்குதான் நிறுவப்பட்டதாம். வெளியே 'கான்கிரீட் ஷெல்'லும், உள்ளே 'ரீ இன்ஃபோர்ஸ்ட் ரபின்' பூச்சு வேலையும் கொண்ட இந்த இரட்டை ஷெல் கூடாரம், ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் அமைப்பை விடக் குறைந்த செலவு மட்டுமல்ல; கூடுதல் பாதுகாப்பும் அளிக்கிறதாம். கடலிலிருந்து 468 மீட்டர் சுரங்கக் குழாய் வழியே, தினசரி 3200 மில்லியன் லிட்டர் கண்ணீரைக் கடலிலிருந்து மின் நிலையத்துக்கு. கண்டென்ஸரைக் குளிர வைப்பதற்காகக் கொண்டு வருகிறார்கள். பிறகு இந்த நீரைக் கடலில் வெளியேற்றுகிறார்கள். அதனால் சுகாதாரக் கேடு எதுவும் வராத அளவுக்குச் சுத்தப் படுத்திய பிறகே இதைச் செய்கிறார்களாம். காலப் போக்கில்தான் இது எத்தனை தூரம் உண்மை என்று சொல்ல முடியும்.

சரி, அயல் நாட்டிலிருந்து கனநீர் வரவழைக்க முடியாததால்தான் உள் நாட்டிலேயே தயாரிக்கத் தொடங்கினோம். உள் நாட்டில் உற்பத்தி தொடர்ந்து கிடைக்கும் என்று என்ன உறுதி? சென்ற ஆண்டு மே மாத வாக்கில் பரோடா கனநீர் உற்பத்தி நிலையத்தில் ஏற்பட்ட ஊழியர்களின் போராட்டமும், 'கேரோ'வும் காரணமாகக் கால வரையறையின்றி அந்த நிலையமே மூடப்பட்ட கசப்பான நிகழ்ச்சி இன்னும் மனத்தை விட்டுப் போகவில்லையே! அதே போல, நாலைந்து வருஷங்களுக்கு முன், கோட்டாவில் கிட்டத்தட்ட ஒன்பது மாதங்கள் ஸ்டிரைக் நடந்து, பலவித தொல்லைகளையும் நெருக்கடிகளையும் அந்தப் பாதிப்பு உருவாக்கவில்லையா? சரியாக இயங்கிக் கொண்டிருந்தாலே ஒழுங்கான உற்பத்தித் திறனைக் காண

கண்ட்ரோல் அறை - கல்பாக்கம் அணுமின் நிலையம்



பிக்காத பரோடா கனநீர் உற்பத்தி மையத்தை நோய் பீடித்த நிலையம்' என்றால் கூடத் தவறில்லை என்று பேசப் படுகிறது. ஆகவே, ''கனநீர் கல்பாக்கத்துக்குத் தொடர்ந்து கிடைக்கவேண்டுமே, கடவுளே!'' என்று ஒரு பிரார்த்தனையுடன் கூடத்தான்கல்பாக்கம்இயங்கத் தொடங்க வேண்டும்.

தாராப்பூருக்கு பிரான்ஸ் யுரேனியம் தரும் என்று நம்பிக் கொண்டிருந்தோம் சில காலம். பிரெஞ்சு வெளி விவகார அமைச்சர் சமீபத்தில் இந்தியா வந்திருந்த போது அந்த நம்பிக்கையைத் தகர்த்தெறிந்தார். கண்டிஷன் போட்டார். அகில உலக அணு சக்தி அமைப்பு விதித்துள்ள பாதுகாப்பு விதிகளுக்கு உட்பட்ட நிலையில் தான் அணு மின் நிலையம் வெளியேற்றும் கழிவுப் பொருள் இருக்க வேண்டும் என்பது தான் பிரான்ஸ் குறிப்பிட்ட முக்கிய விதி. இவர்கள் தான் கல்பாக்கத்துக்கு ஆரம்பத்தில் யுரேனியம் தருவதாகச் சொல்லியிருந்தார்கள். ஆனால் பல கடிதப்போக்குவரத்துக்களும், மீட்டிங்குகளும், பேரங்களும் நடந்தும் காரியம்நடக்கவில்லை.(அமெரிக்க யுரேனியத்தைக்காட்டிலும் பிரெஞ்சு யுரேனியம் இரண்டு மடங்கு விலை ஆகிறதாம்!) ஆக அணுமின் நிலையங்களின் உற்பத்தித் திறன் இதுபோன்ற அரசியல் காரணங்களால் அவ்வப்போது பாதிக்கப்பட வாய்ப்புண்டு.

அணுமின் நிலையங்களுக்கான வேலைகளைத் துவக்கும் போது, திட்டமிடப்படும் தொகையை விடப் பல மடங்குஅவை முடிவடையும் போது செலவாகிவிடுகிறது. துவங்கப் பட வேண்டும் என்று குறிப்பிடப்படும் ஆண்டிலிருந்து ஆறேழு வருஷங்கள் கழித்தே இந்த நிலையங்கள் உண்மையில் துவங்குகின்றன. இதனால் இந்தியா முழுதும், ஆரம்பத்தில் உத்தேசிக்கப்பட்ட தொகையை விட 500 கோடி ரூபாய் இந்த அணு மின் நிலையங்களுக்காக அதிகமாகவே ஆகியிருக்கிறது. அப்போது அணுமின் உற்பத்திச் செலவும் நிச்சயம் கூடத்தானே செய்யும்?

இதெல்லாம் ஒரு புறம் இருக்க, அணுசக்தி நிலையங்கள் அடிப்படையான பாதுகாப்பு விதிகளை மீறுவதாகவும் ஒரு குற்றச்சாட்டு இருந்து வருகிறது. கூடுதலான ரேடியேஷன் ஆபத்துக்குத் தொழிலாளர்களை உள்ளாக்குவது இதில் ஒன்று. டெக்னிகல் விதிகளைப் புறக்கணித்து ரேடியோ - ஆக்டிவிடியைப் பல மடங்கு ரியாக்டர் கட்டிடம் வெளியிடுவதாகவும், ஒரு குற்றச்சாட்டு. இந்த விஷயத்தில் தாராப்பூர் அணு சக்தி நிலையம் உலகிலேயே மிகவும் மோசமானதாகக் கருதப்பட்டுச் செய்தி பரவி, அமெரிக்காவில் உள்ள நுகர் பொருள் இயக்கத் தலைவர் ரால்ஃப் நாடர் எல்லோருக்கும் மேலே குரல் எழுப்பிக் கண்டித்திருக்கிறார்.

மேற்படி ஆபத்துக்கள் போதாது என்கிற மாதிரி, ஹைதராபாத்தில் அணு சக்தி எரிபொருள் நிலையத்தில் இரண்டு வருஷங்களுக்கு முன் ஏற்பட்ட விபத்தும், பரோடா கனநீர் உற்பத்தி நிலையத்தில் அஸ்திவாரமே கிடுகிடுத்துப் போவதுபோல் உண்டான விபத்தும் இன்னும் பலருக்கு மறந்திருக்காது. கல்பாக்கம் இந்த மாதிரி ஆபத்துக்களில் எல்லாம் சிக்காமல் தப்பு- வேண்டும் என்று வேண்டிக்கொள்வோம்!

ஆனால் இந்தியாவில் கடைப் பிடிக்கப்படும் பாதுகாப்பு முறைகள் நிச்சயம் உயர்தரமானவையே என்றும், கல்பாக்கத்திலும் விபத்து, சுற்றுச் சூழல் கேடு இவற்றுக்கு எதிராகத் தேவையான பாதுகாப்பு அமைப்புக்கள் இருப்பதாகவும், இவற்றில் அப்பழுக்குச் சொல்ல முடியாது என்றும் அதிகாரிகள் மூலம் தெரிய வருகிறது. பலவித நெருக்கடி, கெடுபிடிகளுக்கு இடையே, இந்திய விஞ்ஞானிகள் மிக வெற்றிகரமாகச் செயல்பட்டு வருகிறார்கள் என்பது உண்மை.

அணு மின் நிலையங்களை ஆரம்பத்தில் அமைக்க அதிகச் செலவானாலும், அதை நிர்வகிக்கக் குறைந்த செலவே ஆகிறதாம். ஆனால் அனல் மின் நிலையங்களை அமைக்க ஆரம்பத்தில் குறைந்த செலவு ஆனாலும் அதைத் தொடர்ந்து .நிர்வகிக்க அதிகமான செலவு ஆகுமாம். (தாராப்பூர் அணுமின் நிலையம்ஒருகிலோவாட் மின்சாரம் தயாரிக்க 18 அல்லது 19 பைசாவே செலவாகிறது என்று அதன் உயர் அதிகாரி சென்ற வருஷம் ஒரு முறை தெரிவித்தார்.)

இங்கிலாந்தில் அணுமின் தயாரிப்புச் செலவு பற்றி ஆராய்ந்தறிய நியமிக்கப்பட்ட கமிட்டி ஒன்றின் ஓர்ப்புப்படி அங்கே ஒரு கிலோவாட் அணுமின்சாரம் தயாரிக்க 1.65 பென்ஸ் ஆகிறதென்றால், அனல் மின்சாரம் தயாரிக்க 1.85 பென்ஸும், உலை எண்ணெய் மூலம் தயாரிக்க 2.62பென்ஸும் ஆகிறதுஎன்று தெரிய வருகிறது. ஆனால் காலப்-

அவன்: எங்க அப்பாவுக்கு எல்லா பாங்கிலும் அக்கௌண்ட்' இருக்கு

இவன்: எங்க அப்பாவுக்கும்தான்.... ஊரில உள்ள எல்லா மளிகைக் கடையிலும் 'அக்கௌண்ட்' இருக்கு.

—இணைத்துக்கடவு ரவி





### இப்படியும் நடக்கிறது!

நான் சமீபத்தில் இந்திரா நகருக்கு என் உறவினர் வீட்டுக்குச் சென்றேன். அங்கே குழாயடியில் சிறிய டப்பாக்களை வரிசையாக அடுக்கிவைத்திருந்தார்கள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஏனெனில் அதில் தண்ணீர் பிடிக்க முடியாது. அப்போது என் உறவினரைக் கேட்டேன். அப்போது அந்தப் பெண் கூறியது: குடங்களை வைத்துவிட்டுச் சென்றால் மறுநாள் திருட்டுப் போய் விடுகிறது. எனவேதான் சிறு டப்பாக்களை வைத்துவிட்டு அதன் வரிசைப்படி குடங்களில் தண்ணீர் பிடிக்கிறார்கள்!

—வே. முருகேசன்

போக்கில் விலைவாசி உயர்வைக் கணக்கிட்டால் அனல் மின் நிலையத்தில் தயாராகும் மின்சாரத்தின் உற்பத்திச் செலவு அணுமின் நிலைய உற்பத்திச் செலவை விடக் குறைவாகவே ஆகும் என்றும் ஒரு கருத்தை அதே கமிட்டி தெரிவித்திருந்தது. ஒரு காரணம்:

அனல் மின் நிலையத்தில் மூலம் உண்டாகும் சூழ் நிலைக் கேடுகளைத் தடுக்கும் பணிகளை முன்கூட்டியே திட்டமிட்டுச் செய்ய முடிகிறது. ஆனால் அணுமின் நிலையத்துக்குத் தேவையான பாதுகாப்பு அமைப்புக்காக, அவ்வப்போது கண்டுபிடிக்கப்படும் நவீன தடுப்பு முறைகளைக்கையாளவேண்டியிருக்கிறது. வடிவமைப்பையே சில சமயம் மாற்றக்கூடிய அளவுக்கு—நில அதிர்ச்சி, தீவிபத்து, குழாய் வெடிப்பு இவற்றை யெல்லாம் கவனத்தில் கொண்டு அவ்வப்போது மாற்றி அமைக்க வேண்டியிருக்கிறதாம். ஆனால் இவை எல்லாம் கல்பாக்கத்தைப் பொறுத்தவரை மிகவும் 'பக்கா'வாகச் செய்யப்பட்டிருப்பதாகவும் பாதுகாப்பு விதிகளில் அதிகப்பட்சக் கவனம் எடுத்துக் கொண்டிருப்பதாகவும் கூறுகிறார்கள்.

இந்த இடத்தில் ஒரு சிறு குறிப்பு: அமெரிக்க சுப்ரீம் கோர்ட் இந்த ஏப்ரல் மாதம் அந்நாட்டின் அணு மின் நிலைய அமைப்புகளுக்கு ஓர் அதிரடி கொடுத்தது: பயங்கர விளைவுகளைத் தரும் ரேடியோ ஆக்டிவ் கழிவுப் பொருளை நிர்வகிக்க, பாதுகாப்பான ஒரு முறையைக் கண்டு பிடித்தால் ஒழிய, புதிய அணு மின் நிலையம் அமைக்கக்கூடாது என்பதுதான் அந்தத் தீர்ப்பு! நமக்கும் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டிய தீர்ப்பு.

தமிழ்நாடு மின்சார வாரியத்துக்கு, யூனிட்டுக்கு 38 பைசாவுக்கு மின்சாரம் கொடுக்கப் போகிறார்கள் கல்பாக்கம் அணுமின் நிலையத்தினர் என்று செய்திகள் வந்தன. அப்படியானால் ஒரு யூனிட் மின்சார உற்பத்திச் செலவு எவ்வளவு? இருபது பைசாவுக்குள்தான் இருக்குமாம். இது எப்படி சாத்தியமாகிறது?

பிரெஞ்சு நிபுணர்கள் பீட்டர் பன்யார்டும், எட்வர்டு கோல்ட்ஸ்மித்தும்இது பற்றி பிரான்சில் ஆராய்ந்து வெளியிட்ட ஒரு கட்டுரையைப் பார்த்தால் இதற்கு ஒரு காரணம் தெரிய வருகிறது. அரசாங்கத்தின் எரிபொருள் துறை, அறுபது சதவீதம் தொகை மான்யமாகக் கொடுத்து விடுகிறதாம்.'' ரீஸர்ச் அண்ட் டெவலப்மெண்ட் என்ற பெயரில். இதையும் கணக்கில் எடுத்துக் கொண்டால், அணுமின் நிலைய உற்பத்திச் செலவு எக்கச் சக்கமாக ஆகும். (இங்கேயும் அதே கதைதானோ?)

இந்திய அணு சக்தி யுகத்தின் தந்தை என்று போற்றப்படும் ஹோமி பாபா 1980-81ல் 8000 மெகா வாட் அணுமின்சாரம் நமக்குத் தேவைப்படும் என்று கணித்தார். அது வரவர 1240 மெகாவாட் ஆகக் குறைந்தது மட்டுமின்றி, நமது தற்போதைய தேவையான 860 மெகாவாட் அணுமின்சாரத்தைக் கூட உற்பத்தி செய்ய இயலாமல் இருக்கிறோம். இதே அளவு முதலீட்டையும், உழைப்பையும் அனல்மின் நிலையம் அல்லது நீர் மின் நிலையம் அமைப்பதில் செலவிட்டு இருந்தோமானால் நிறைய ஆதாயம் கிட்டியிருக்குமென்றும் ஒருகருத்து நிலவுகிறது.

ஆனால் இங்கே அனல் மின் நிலையமோ, அணுமின் நிலையமோ — எப்படியானும் மின்சாரம் கிடைத்தால் போதும்டா சாமி என்று ஓய்ந்து போய்க் கிடக்கிறோம் நாம். செலவைப் பார்த்துப் பிரமித்துப்போய் விட்டால், கிடைக்கிறதும் இல்லாது போய் விடும். மேலும் நிலக்கரி ஸ்டாக் இன்னும் ஒரு வாரத்துக்குத் தான் இருக்கிறது; ஒரு மாத மின்சார உற்பத்திக்குத்தான் இருக்கிறது...'' என்று அடிக்கடி அனல் மின் நிலையங்கள் அபாய அறிவிப்புச் செய்யும் நிலைமை இங்கே. நிலக்கரி கொண்டு வரக் கப்பல் வாங்கலாம் என்றால், கப்பல் கப்பலாக ஊழல் என்று எதிர்க் கட்சிகள் குற்றச்சாட்டு. இந்த நிலைமையில் செலவு அதிகமானாலும் அணுமின் நிலையம் தடைப்படாமல் மின் உற்பத்தி செய்து தமிழ் நாட்டின் தொழில் வளத்துக்கு உதவி வந்தால், அதுவே பெரிய காரியம்!

-சாரு

(ஆதாரம்: தமிழ்-ஆங்கில தினசரிகள், மாத இதழ்களில்அவ்வப்போது வெளியான செய்திக் குறிப்புகள்.)


இந்தியாவுக்கு ஆயுதங்கள் விற்பதில் போட்டி!
ரஷ்யா
இந்தா புடி துப்பாக்கி!
பிரான்ஸ்
எப்படி ஹெல்மெட்? பார் கண்ணாடியிலே!
அமெரிக்கா
மாட்டிக்க தோட்டா பெல்ட்!
பிரிட்டன்
பூட்ஸ் மாட்டிக்கோ!


தேர்தல் ஒழுங்கீனங்கள்
அதிக அதிகாரங்கள்
தேர்தல் கமிஷன்
இந்த மாதிரி பம்பர், பௌன்ஸர் களைச் சமாளிக்க ஜம்முனு, ஹெல்மெட் இருந்தா தான் முடியும்!


மந்திரி சபையில் மாறுதல் வேடிக்கைகள்

கல்கி



1983 ஜூலை 17
ருத்ரோத்காரி ஆடி 1
மலர் : 41 இதழ் : 51



# பளார்!

**ப**ளார்! — என்ன சத்தம் அது? ஒன்றுமில்லை; குரோம்பேட்டை ராதாநகர்வாசி ஒருவர் அப்துல் ரசாக்கிடம் அடி வாங்கியிருக்கிறார், அவ்வளவுதான். இந்த நாட்டின் ஒரு சாதாரணக் குடிமகனைக் கன்னத்தில் 'பளார்' என்று அடிப்பதற்குக் கூட உரிமையில்லை என்றால் அரும்பாடு பட்டு அப்துல் ரசாக் எம். எல். ஏ. பதவி பெற்றுத்தான் என்ன பயன்? ஒரு பொறுப்புள்ள குடிமகன், தண்ணீர் இல்லையென்றால் உடனே எம். எல். ஏ.யைத் தட்டிக் கேட்டுவிடுவதா? என்றோ ஒரு நாள் தண்ணீர் கிடைக்கும்வரை கை கட்டி வாய் பொத்திக் கொண்டு சும்மா இருக்க வேண்டியதுதானே! ''இங்கே தண்ணீருக்குத் தவியாய்த் தவிக்கிறோம்; நீங்க டி. வி.க்காரங்க காமிராக்காரங்களுடன் வந்துட்டீங்களே'' என்று கேட்கலாமா? அதுவும் ஆளும் கட்சி எம். எல். ஏ.வைப் பார்த்தா கேட்பது? என்ன துணிச்சல்!

பத்திரிகைகள் இந்த நிகழ்ச்சியை இருட்டடிப்பு செய்தால் அப்துல் ரசாக் சந்தோஷப்படுவார்; ஆனால் பெரிதுபடுத்தினாலும் அவருக்கு அது பற்றிக் கவலை இல்லை. இந்த ராதாநகர் வாசிகளை நம்பியா அவரது எம். எல். ஏ. பதவி இருக்கிறது? எம். ஜி. ஆர். என்ற மூன்றெழுத்துக்கள் எத்தனை வோட்டுக்களைத்தான் பெற்றுத் தராது! செல்வி ஜெயலலிதா ஒரு முறை தொகுதிக்கு வந்து போனால் போதாதா? அப்புறம் பண பலம், அதிகார பலம் எல்லாம் இருக்கின்றனவே காணாதா? இதையெல்லாம் ஆணவப் போக்கு என்று யாராவது எண்ணினால் அவரது அறியாமையை எண்ணித்தான் விசனிக்க வேண்டும். தலைவரிடம் அப்துல் ரசாக்குக்கு உள்ள அசைக்க முடியாத நம்பிக்கையை அல்லவோ அவரது இந்த நடத்தை நமக்கு உணர்த்த வேண்டும்!

அப்துல் ரசாக்கின் இந்தச் செயலை ஏன் முதல்வர் கண்டித்து நடவடிக்கை எடுக்கவில்லை என்று கேட்பதைவிட முட்டாள்தனம் வேறு என்ன இருக்க முடியும்? முதல்வருக்கு எத்தனையோ காரியங்கள். இந்தச் சின்ன விஷயங்களையெல்லாம் அவரால் கவனித்துக் கொண்டிருக்க முடியுமா? கன்னத்தில் அறை வாங்கிய ஆசாமியின் ஆணவம் பற்றி முதல்வருக்குத் தெரியாதா? முதல்வர்கூடத்தான் கிருஷ்ணா நதி நீர் வருமுன்னரே பிரமுகர்களைக் கூட்டிப் புகைப்படம் எடுத்துக்கொண்டார். திரைப்பட, டி. வி. காமிராக்கள் இயங்கின. அடுத்து ராதாநகர்வாசி முதல்வரைப் பார்த்தும் இதே போன்ற கேள்வி கேட்க மாட்டார் என்பது என்ன நிச்சயம்?

அமெரிக்காவாக இருந்தால் அப்துல் ரசாக் கைதாகி யிருப்பாராம், 'அத்தைக்கு மீசை முளைத்தால்...' என்பது போல் அமெரிக்காவிலிருந்து வந்திருக்கும் ஒருவர் ஆசிரியருக்குக் கடிதம் எழுதிவிட்டார்! இந்தியா அமெரிக்கா ஆகிவிடுமா? கல்வி அறிவு இல்லாத, அதிகார பலத்துக்கு அஞ்சுகிற மக்களைப் பெற்றுள்ள இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் வித்தியாசம் இல்லையா என்ன? இது அமெரிக்காவாக இருந்தால் அப்துல் ரசாக் அடித்து இருப்பாரா? அவ்வளவு மூளை இல்லையா அவருக்கு? அல்லது இத்தனை தண்ணீர் கஷ்டத்துக்குத்தான் அமெரிக்க அரசு தன் மக்களை ஆளாக்கி யிருக்குமா?

ஆக, பாக்கியசாலியான ராதாநகர் வாசியே! ஒரு கன்னத்தில் அறைந்தவருக்கு மறு கன்னத்தையும் காட்டுவீராக. அதிலும் நிச்சயம் அடி விழும்; வாங்கிக்கொண்டு மகிழ்வீராக!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

● ''விழுப்புரத்தின் வேதனைகள்'' கட்டுரை நமது இதழில் வெளியாகும் சமயம் 23-6-83 அன்று நமது தமிழக முதல்வர் விழுப்புரம் வருகை தந்ததை முன்னிட்டு வடக்கு வீதியில் குறிப்பிட்டிருந்த சீர்கேடுகளைக் களையும் பொருட்டுப் பணியை ஆரம்பித்து மேல வீதியில் ஐந்து இடங்களில் புதியதாக சோடியம் வேபர் பல்புகளை முதல்வர் வரும் சாலையில் அமைத்தனர் என்பதனையும், அதே நேரத்தில் ஏழு இடங்களில் போடப்பட்டிருந்த ஆழ் குழாய் கைப் பம்புகள் இருபதுக்கும் மேற்பட்ட இடங்களில் விரிவாக்கம் பெற்றிருந்தன என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.
விழுப்புரம் ப. காந்தி

● ஹேமா ஆனந்த தீர்த்தன் கட்டுரையில் மாணவர்களுக்குப் பயந்து – என்ன செய்து விடுவார்களோ என்று பயந்து வக்காலத்து வாங்கியதாக எழுதியிருக்கிறார். கோவி ஒரு மாவீரன் என்பது தமிழகம் அறியும்.
சென்னை கோவி. மணிசேகரன்

● 'நீங்கள் கேட்டவை' பகுதியில் தராசு குறிப்பிட்டிருப்பது போல், ஜனதா சந்திரசேகரின் பாத யாத்திரையால் ஒரு கோடி ரூபாய் சேரவில்லை. சுமார் பத்து லட்சம் ரூபாய் மட்டுமே சேர்ந்ததாகவும் அதில் ஒரு பகுதியைக் கட்சிக்குக் கொடுத்துவிட்டு, மீதியைச் சமூக ஆக்கப் பணிகளுக்குச் செலவிடுவதாகவும் கூறியிருக்கிறார்.
கெங்கவல்லி வாசுகி

● மச்சதேவி நாடகத்தைப் படித்ததில் எனக்குச் சிரிப்பும் ஆரோக்கியமும் இரண்டும் ஒருமாகக் கிடைத்தன.
செங்கை ராமு

● வருகிற ஆகஸ்ட் ஆண்டு மலரில் கல்கியில் சுஜாதாவும் சிவசங்கரியும் எழுதப் போகிறார்கள் என்பதை நீங்களே தெரிவிக்காமல் அவர்களுடைய கையெழுத்து மூலமாக வாசகர்களுக்குத் தெரிவித்திருக்கும் புதுமையைப் பாராட்டுகிறேன்.
குளச்சல் எம். முகம்மது இப்ராஹிம்

● பூக்களின் ராஜாவான ரோஜாவைப்பற்றி இத்தனை தகவல்களா? அனைத்தும் பயனுள்ள தகவல்கள்.
திருநெல்வேலி எஸ். கணேசன்

● இந்திய கிரிக்கெட் அணி உலகக் கோப்பையை வெல்வதற்கு முன்பே எழுதப்பட்ட தலையங்கத்தில் உலகின் உச்சியில் என்று குறிப்பிட்டதாலோ என்னவோ இந்திய அணியின் புகழ் இப்போது உலகின் உச்சியில் தான் நிச்சயமாக இருக்கிறது.
சிவகாசி வி. வசந்தகுமார்

● திகில் – விறுவிறுப்பு மட்டும் அல்லாமல் இதயத்தின் சராசரி துடிப்பைக்கூட வாரா வாரம் அதிகரிக்கச் செய்து விட்டது ''இறுதிப் போராட்டம்''.
ஊரூர் வெளிக்கடை ராஜன்

● கோவை வேளாண்மை பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர்களுக்கும் திரு ஹேமா ஆனந்த தீர்த்தனுக்கும் இடையே நிகழ்ந்த சர்ச்சையில் நடுநிலை வகித்த தாங்கள் அளித்த தீர்ப்பு, தாங்கள் ஒரு 'தராசு' என்பதை நிரூபித்து விட்டது.
திருப்பூர் எஸ். ரமேஷ் குமார்

● தென்றலாகப் புறப்பட்டுப் புயலாக மாறிய பட்டுக் கோட்டை ராஜேனின் காதல் ஓவியம் அற்புதப் படைப்பு.
வளவனூர் வ. பொன்னம்பலம்

● முதல் பக்க வியாபார நாணயக் கட்டுரை கனஜோர். நம்மவர்களுக்கு இது உரைத்தால் சரி. ரஷ்யாவுக்கு நாம் ஏற்றுமதி



# வட்ட மேஜை



செய்த ஒன்றரைக் கோடி ரூபாய் பெறுமான செருப்புகள் திரும்பி வந்துவிட்டன. அடிப் பக்கம் வெறும் அட்டையாம்.
புதுதில்லி சுப்பு

● ''செய் தொழில் சிறக்க'' கட்டுரையில் வெம்ஜி ஜெனரல் மோட்டார்ஸைப் பற்றி எழுதியிருக்கிறார். நடந்த விஷயம் என்னவென்றால், ஓர் ஆண்டில் ஜெனரல் மோட்டார்ஸ் கம்பெனியின் குறிப்பிட்ட மாடல் கார்கள் அடிக்கடி விபத்துக்குள்ளாயின. இதில் சந்தேகம் கொண்ட ரால்ஃப் நேடர் அந்த மாடல் காரை அக்கு வேறு ஆணி வேறாகக் கழற்றித் தீவிரமாக ஆராய்ந்தார். தயாரிப்பில் ஒரு பெருங் குறை இருப்பதைக் கண்டு பிடித்தார்.

தமது ஆய்வுகளைப் புத்தகமாக வெளியிட்டார். பெரும் பரபரப்பை இப்புத்தகம் ஏற்படுத்தி, நாடாளு மன்றத்தில் பல கேள்விகள் கேட்கப்பட்டு, வேறு வழியின்றி அமெரிக்காவில் உள்ள அந்த மாடல் கார்கள் அத்தனையையும் ஜெனரல் மோட்டார்ஸ் திரும்பப் பெற்றது.
திருச்சி-18 எஸ். புஷ்பவனம்

# நேசமுள்ள வான்சுடரே

சவீதா

## 14

'லேபர்' வார்டில் பத்மாவின் உதவியுடன் இருபது குழந்தைகள் சுகமாக இந்த உலகத்தின் வெளிச்சத்துக்கு வந்து சுவாசிக்கத் தொடங்கின. ஒருவாரத்திற்குப்பிறகு ராம்குமாரும் இருபது சுகப் பிரசவங்களைப் பார்த்து முடித்தான். அந்த சீஸனில் குழந்தைகள் அதிகமாக இரவு நேரங்களில் பிறந்தன. அந்த ரகசியத்தைப் பெரிய கொண்டை போட்டிருந்த ஓர் அகலமான ஆயாவிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட சுப்பையா இரவும் பகலும் லேபர் வார்டுக்குச் சென்றான். அவனுடைய கைவரிசையால் சில இயற்கைப் பிரசவங்கள் ஃபோர்ஸெப்ஸ், சிஸேரியன் 'கேஸ்'களாக மாறின.

இறுதியாண்டுப் படிப்பு ஒருவாறாக முடிவடைந்தது.

ஞாயிற்றுக் கிழமை காலை பத்து மணிக்கு மெஸ்ஸிலிருந்து விடுதி அறைக்குத் திரும்பிய பத்மா விஸிட்டர்ஸ் ஹாலைக் கடந்தபோது சின்ன அதிர்ச்சிக்கு ஆளாகி ஒரு நொடி சிலையாக ஸ்தம்பித்தாள். சித்தியும் சித்தப்பாவும் பலகார, பட்சண மூட்டைகளுடன் அமர்ந்திருந்ததை அதிசயித்துப் பார்த்தாள்.

சித்தியின் கையைப் பிடித்துத் தன் அறைக்கு அழைத்துச் சென்றாள். டெய்சி வரவேற்றாள். காப்பி வாங்கி வரத்தோட்டக் காரனைத் தேடிக் கொண்டு வராந்தாவில் ஓடினாள்.

''ரொம்பஇளைச்சுப்போயிட்டியே, உடம்பை ஜாக்கிரதையாக் கவனிச்சிக்கோம்மா'' என்று



சித்தி புறப்படும்போது கரிசனத்துடன் சொன்னாள். "சித்தப்பா உனக்கு ஆஸ்பத்திரி வெச்சுக் கொடுக்கப் பணமெல்லாம் தயார் பண்ணிட்டாரு." என்றாள்.

"அதுக்கு இன்னும் நாள் இருக்குதே சித்தி" என்றாள் பத்மா.

உடனே சித்தப்பா சித்தியைப் பார்த்து, "பரீட்சை முடிஞ்சதும் போர்டைத் தொங்க விட்டரலாம்னு நெனைச்சியா?" என்றார். "ரிஸல்ட் எல்லாம் வந்து பட்டமளிப்பு விழா நடக்கும். அப்புறம்தான் பிராக்டிஸ் பண்ண முடியும்"

"இல்லே சித்தப்பா ரிஸல்ட் வந்தாக்கூட பிராக்டீஸ் பண்ண முடியாது."

பத்மா அப்படிச் சொன்னதும் அவர்கள் முகங்களில் எரிந்து கொண்டிருந்த விளக்குகள் திடீரென்று அணைந்தன.

"ஏம்மா?"

"இன்னும் ஒரு வருஷம் ஹவுஸ் சர்ஜனா இருக்கணும்."

"அது வேறயா?" என்றாள் சித்தி. "இதுலயே ஆயுசிலே பாதி கழிஞ்சிரும் போல இருக்கே."

பஸ் ஸ்டாப் வரை பத்மா கூடச் சென்று அவர்களை வழியனுப்பி விட்டு வந்தாள்.

டெய்சி, "அஞ்சு வருஷத்துக்குப் பிறகு இன்னிக்குத்தான் உன் சித்தி சித்தப்பாவுக்கு இந்த ஹாஸ்டலுக்கு வழி தெரிஞ்சுதா? சரியான சுயநலக்காரங்க. பார்த்தாலே தெரியுது" என்றாள்.

"பாவம், வயசுக் காலத்திலே என்னைப் பார்க்க ஆசையோட வந்திருக்காங்க. அவுங்களை ஏண்டி அப்படிச் சொல்றே" என்ற பத்மா சித்தி கொடுத்த போர்ன்விடா டின்னைத் திறந்து சீடையில் ஒரு கை அள்ளி டெய்சியிடம் கொடுத்தாள்.

"நீ விட்டுக் குடுப்பியா உன் சித்தி சித்தப்பாவை" என்றாள் டெய்சி. 'கடுக்'கென்று சீடையைக் கடித்துவிட்டு, "இதுவும் அவுங்க மனசு மாதிரிதான் இருக்கு" என்றாள்.

பத்மாவும் ராம்குமாரும் கல்லூரித்தோட்டத்திலும், நூல் நிலையத்திலும் விளையாட்டு மைதானத்திலும் ஒன்றாக அமர்ந்து போட்டி போட்டுக் கொண்டு தேர்வுக்காகப் படித்தனர், விவாதித்தனர், சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டனர். தியரி, கிளினிக்ஸ், ஓரல் தேர்வுகள் நடந்தேறின. போர்டு மீட்டிங் முடிந்ததும் அதிகார பூர்வமற்ற முடிவுகள் தெரிந்தன. இரண்டு மாத விடுமுறை தொடங்கியது.

மகளிர் விடுதிக்கு எதிரே வேப்ப மரத்தின் மத்தியான நிழலில் பத்மாவும் ராம்குமாரும் சந்தித்து இறுதியாண்டுத் தேர்வில் வெற்றி பெற்றதற்காக ஒருவருக் கொருவர் 'கங்ராட்ஸ்' சொல்லிக் கொண்டனர். ராம் சிவப்பாக 'டி' ஷர்ட் அணிந்து தலைக்கு 'க்ரீம்' தேய்த்துப் பளபளவென்று வாரியிருந்தான். பத்மா கனகாம்பர நைலக்ஸ் உடுத்தி, வலது காதுக்கு மேலே கூந்தலில் வெள்ளை ரோஜாவைச் செருகியிருந்தாள். ரோஜா வாடிக் கொண்டிருந்தது.

''சவ்னிங் புறப்படறேன்'' என்று ராம் அவள் முகத்தையே பார்த்தான்.

அவள் விழிகளில் கண்ணீர் பொங்கிக் கன்னங்களில் இறங்கின. கீழ் உதட்டை இறுக்கமாகக் கடித்துக் கொண்டு உணர்ச்சிக் கொந்தளிப்பைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறினாள்.

ராம் நாலா பக்கமும் ஒரு முறை சுற்றிப் பார்த்தான். யாரும் அவர்களை வேடிக்கை பார்த்த மாதிரித் தெரியவில்லை. தன் ஆள் காட்டி விரலால் அவள் கன்னங்களில் பாய்ந்த கண்ணீரைத் துடைத்தான்.

''போயி லெட்டர் எழுதுங்க'' என்றாள் பத்மா.

''லெட்டர் எழுதிப் போஸ்ட் பண்ணிட்டு உன் பதிலுக்காக கொடைக்கானல் போஸ்ட் ஆபீஸிலேயே உட்கார்ந்திருப்பேன்.''

பத்மா அவனை ஏறிட்டுப் பாராமல் கைக் குட்டையைச் சுருட்டிப் பல்லால் கடித்துக் கொண்டு பெருமூச்செறிந்தாள்.

''ரெண்டு மாசமும் ஹில்ஸ்ல இருக்க மாட்டேன் பத்மா. சீக்கிரமா வந்துருவேன்.''

''வேண்டாம். எதுக்காக இங்கே அவ சரப்பட்டு ஓடியாறீங்க. லீவு முடிஞ்ச பிறகே வாங்க.''

''ஏன்?''

''அம்மா அப்பாவோட ரெண்டு மாச மாவது இருங்க. பாவமில்லே அவுங்க.''

''நான் திரும்பி வர்றப்ப அநேகமாக அவுங்க என் கூட மெட்ராசுக்கு வந்தாலும் வந்திருவாங்க. அம்மாவுக்கு அடிக்கடி ஜுரம் வருது. சேஞ்ச் ஆஃப் ப்ளேஸ் தேவைன்னு டாக்டர்ஸ் அட்வைஸ் பண்றாங்க.''

''இங்கே வந்து பர்மெனென்டா செட்டில் ஆயிடுவாங்களா?'' என்று பத்மா கேட்டபோது அவள் விழிகளில் ஒருவித பிரகாசம் தோன்றியது.

''இங்கேயும் அங்கேயுமா இருப்பாங்க.''

''சவ்னிங்நானும் ஸ்டேஷனுக்கு வர்றேன்.''

''எதுக்கு? வேண்டாம் பத்மா.''

''டெய்சி கட்டாயம் ஸ்டேஷனுக்கு வரணும்னு சொல்லி யிருக்கா. அவளும் பாண்டியன்லதான் ரிசர்வ் பண்ணியிருக்கா!''

எழும்பூர் ரயில் நிலையத்தின் ப்ளாட் பாரத்தில் ராம்குமார் டெய்சிக்கும் பத்மாவுக்கும் ஆப்பிள் ஜூஸ் வாங்கிக் கொடுத்தான். டெய்சி 'டூ டையர் ஸ்லீப்பரி'ல் ஏறி அமர்ந்தாள். பக்கத்திலேயே இருந்த முதல் வகுப்புப் பெட்டியில் ஜன்னல் ஓரமாக ராம் சாய்ந்தான். இருவரிடமும் பத்மா மாறி மாறிப் பேச வசதியாக இருந்தது. ரயில் புறப்படுவதற்காக ஸிக்னலில் பச்சை விழுந்தபோது பத்மாவுக்குள் சோகம் கலந்த பயம் உருண்டு திரண்டது.

விடுதிக்குத் தனியாக இரவு எட்டரை மணிக்குத் திரும்பினாள். அநேக அறைகள் காலியாகி ஜன்னல்கள் இருளடைந்து கிடந்தன.



# சிறந்த ஜோக்

# போட்டி முடிவு

22—5—83 இதழில் வெளியான சிறந்த ஜோக் என திரு 'காத்தாடி' ராமமூர்த்தி தேர்ந்தெடுத்தது:

மனைவி: நீங்க ஓட்டல் முதலாளியா இருக்கவாம். அதற்காக நம்ம பையன் ஸ்கூல் புத்தகங்களுக்கு அட்டை போட்டுத் தரச் சொன்னா புத்தகத்தின் மேலே ''இது கே. மூர்வியிடமிருந்து திருடப்பட்டது'' என்று எழுதிக் கொடுப்பது?

இதே ஜோக்கைச் சிறந்ததாகத் தேர்ந்தெடுத்த கல்கி வாசகர்கள் முப்பது பேர். இவர்களில் பரிசுக்குரிய ஐவர் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

1. திருமதி உமா பாலகிருஷ்ணன்,
18, ஸ்ரீனிவாசன் தெரு
மேற்கு மாம்பலம்
சென்னை-600 033.

2. எஸ். ஜெயசந்திரன்.
40, நேருஜி நகர்.
திண்டுக்கல்-624 007.

ப. துரைசாமி,
3, வ. உ. சி. தெரு.
இராசிபுரம், 637 408
சேலம் மா. வ.

4. அ. சம்பத்.
306, அய்யாவையா சந்து.
மேல வீதி
தஞ்சாவூர் 613 009.

5. ஆர். வெங்கடேசன்,
6—147, எல்லைப்புற காந்திஜி தெரு.
பரமக்குடி 623 707

இவர்கள் ரூ. 125 பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொள்கின்றனர். நகைச் சுவைத் துணுக்கை எழுதிய திருமதி லலிதா செல்லப்பா ரூ. 125 பரிசு பெறுகிறார்.

தன் அறையைத் திறந்தாள். வெறுமையும் தனிமையும் வெகு நாட்களுக்குப் பிறகு அவளைச் சூழ்ந்து கொண்டன. டெய்ஸியின் சூட் கேஸ் இருந்ததால் தூசிக்குத் தப்பிய இடம் சதுரமாக அவளைப் பார்த்தது. ஹாங்கரில் அவளுடைய கைப் பையும் கொடியில் அவளுடைய துணி மணிகளும் இல்லை. ஒருவித சோகமும் வருத்தமும் பத்மாவின் நெஞ்சை அழுத்தின.

பிரௌன் காகிதத்தால் அட்டைபோட்டுப் பத்திரமாக வைத்திருந்த சர்ஜரி புத்தகத்தைக் கையில் எடுத்தாள். ராம் வாங்கித் தந்தது அது. மேலட்டையின் உட்பக்கத்தில் செருகப்பட்டிருந்த புத்தகத்தின் முதல் தாளை விடுவித்தாள். அதில் ஒட்டி வைத்திருந்த ராமின் படத்தையே மௌனமாகப் பார்த்தாள். கல்லூரி மாகஸினில் 'மௌனத்தில் பேசி' என்ற தலைப்பில் அவன் எழுதிய கட்டுரை பத்மாவின் நினைவுக்கு வந்தது. பேனாவை எடுத்தாள். அவன் படத்துக்குக் கீழே 'நாம் மௌனத்தில் பேசிடுவோம்' என்று எழுதினாள். விளக்கை அணைத்தாள். படுக்கையில் சாய்ந்தவள் புத்தகத்தைத் தலையணை யருகே வைத்துக் கொண்டாள். இருளில் எண்ணங்கள் வேகமாகச் சுழன்றன. ராமையும் டெய்ஸியையும் அடுத்த இரண்டு மாதங்களுக்குப் பார்க்க முடியாது. நாளைக் காலை துணி மணிகளைச் சுருட்டிக் கொண்டு ஆயிரம் விளக்குக்கு ஓடவேண்டும்.

பத்மா எதிர்பார்த்ததற்கு நேர்மாறாகச் சித்தி வீட்டில் வாழ்க்கை சுகமாக இருந்தது. சித்தப்பாவின் உத்தரவுப்படி சித்தி அவளுக்கு எந்த வேலையையும் வைக்கவில்லை. சுற்று வேலைகளுக்கு ஒரு பாட்டி இருந்தாள்.

பத்மாவுக்குப் புதிதாகக் கட்டிலும் மெத்தையும் வாங்கித் தனியறைக்குள் போட்டார்கள். காலையில் அவள் கண் விழித்த போது காப்பி படுக்கைக்கு வந்தது. 'நான் டாக்டராகி விட்டதால் இந்த மரியாதைகளா?' என்று பத்மா ஆச்சரியப்பட்டாள்.

பகலில் ராமிற்கும் டெய்ஸிக்கும் பக்கம் பக்கமாகக் கடிதங்கள் எழுதினாள். மாத்திரை வாங்கிக் கொடுத்து சித்தப்பாவின் ஜுரத்தை விரட்டினாள். யு. எஸ். ஐ. எஸ். சுல்சரல் ஸெண்டருக்குப் போய்விட்டு வந்து தபால்காரரை ஆவலுடன் எதிர்பார்த்தாள். ராமின் கடிதத்தை அவள் எதிர் பார்த்த நாட்களில் தபால்காரர் கொண்டு வந்து கொடுத்தார். விடுமுறை நாட்கள் விரைந்தோடின.

ஹவுஸ் சர்ஜன் குவார்ட்டர்சுக்குப் புறப்பட ஆயத்தங்களைச் செய்தாள். சித்தி அவளைப் பாரிமுனைக்கு அழைத்துச் சென்று நான்கு நைலக்ஸ் புடவைகளும் உள்ளாடைகளும் வாங்கிக் கொடுத்தாள்.

ஒரு செவ்வாய்க் கிழமைக் காலை ராமிடமிருந்து வந்த கடிதம் பத்மாவுக்கு அளவில்லாத மகிழ்ச்சியைத் தந்தது. ''செவ்வாய் இரவே நாங்கள் சென்னை வந்து விடுவோம். புதன் காலை சாந்தோம் வீட்டுக்கு வரவும்'' என்று ராம் எழுதியிருந்தான்

(தொடரும்)



# ஐந்தின் பெருமை

இந்த உலகமானது ஐம்பூதங்களால் உண்டாக்கப்பட்டது. அவை மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம் ஆகியன. ஒவ்வொரு உடம்பிலும் அறிவை வளர்க்கும் உறுப்புக்கள் ஐந்துஉள்ளன. அவை கண், காது, மூக்கு, நாக்கு, உடம்பு.

ஐந்து முகம் கொண்ட சிவபெருமான், நேபாளம், காசி, காளஹஸ்தி, திருவானைக்காவல், சித்தேச்வர் மகாதேவ் (மத்ய பிரதேசம்) ஆகிய ஸ்தலங்களில் அருள் பாலிக்கிறார். பஞ்ச பூத க்ஷேத்திரங்கள் என்று சிறப்பாகச் சொல்லப் படுகின்றன. அவை காஞ்சிபுரம், திருவானைக்காவல், திருவண்ணாமலை, ஸ்ரீ காளஹஸ்தி, சிதம்பரம் ஆகும். தமிழ் நாட்டில் நடராஜருக்கு ஐந்து சபைகள் உள்ளன. கனகசபை — சிதம்பரம்; ரஜத சபை —மதுரை; தாம்ர சபை — திருநெல்வேலி; ரத்ன சபை — திருவாலங்காடு; சித்திர சபை — திருக்குற்றாலம்.

பழங்காலம் தொட்டு வீடுகளில் பஞ்சாயதன பூஜை என்று கடவுள் வழிபாடு செய்யப் பட்டு வருகிறது. இதில் கணபதி, பரமேஸ்வரன், பார்வதி, விஷ்ணு, ஆதித்யன் — இவர்கள் பூஜிக்கப் படுகின்றனர். அபிஷேகத்தில் பஞ்சாம்ருத அபிஷேகம் மிக முக்கியமானது. பழம், தேன், சர்க்கரை, நெய், பால்.

பழங்காலத்தில் பஞ்சாக்கினி தபஸ் என்பது பிரசித்தம். இது நான்கு பக்கங்களிலும் 4 அக்னியை வளர்த்துக் கொண்டு, மத்தியில் சூரியனை அக்னியாகக் கொண்டு தபஸ் செய்வதாகும்.

கோவில்களில் பஞ்சமூர்த்தி புறப்பாடு என்பது விசேஷமானது. (விநாயகர், ஸுப்ரமணியர், பரமசிவன் பார்வதி, சண்டிகேஸ்வரர்) கோவில்களிலும் வீடுகளிலும் பூஜை செய்வதற்கு 'பஞ்ச பர்வாக்கள்' என்று விசேஷ நாட்கள் சொல்லப் படுகின்றன. (அமாவாசை, பௌர்ணமி, 2 அஷ்டமி, மாதப் பிறப்பு) பஞ்ச ஸம்ஸ்காரம் என்று வைஷ்ணவத்தில் சொல்லப் படுகிறது. (நாமம் தரித்தல், சக்கர-தாரணம், த்வய மந்திரம், அஷ்டாக்ஷரம், சரணாகதி) பாஞ்சராத்ரம் என்பது ஒரு முறை. 5 ராத்திரியில் விஷ்ணு பூஜை செய்வதற்கு வேண்டிய ஸம்ஹிதைகளைப் பெருமாளே உபதேசித்ததாக உண்டு.

திதி, வார, நக்ஷத்திர யோக, கரணங்களைக் கூறுவது பஞ்சாங்கம். 'பஞ்ச மஹா யக்ஞம்' என்று விசேஷமாகக் கூறப்பட்டுள்ளது. அவை (1) தேவ யக்ஞம் — ஸமித்தால் அக்னியில் ஹோமம் செய்வது; (2) பித்ரு யக்ஞம் — பித்ரு காரியங்களைச் செய்தல்; (3) பூத யக்ஞம் — பிராணிகளுக்கு உணவளித்தல்; (4) மனுஷ யக்ஞம் — விருந்தோம்பல்; (5) ப்ரும்ம யக்ஞம்—தினமும் வேதத்தை ஓதுதல் என்பவை ஆகும்.

யோக லிங்கம், போக லிங்கம், வரலிங்கம், மோக்ஷ லிங்கம், முக்தி லிங்கம் என்பவை பஞ்ச லிங்கங்கள். பஞ்ச பாண்டவர்கள்; தர்மர், பீமர், அர்ச்சுனர், நகுலர், ஸஹாதேவர் ஆகியவர்கள். அகல்யா, த்ரௌபதி, சீதா, தாரா, மண்டோதரி, இவர்கள் பஞ்ச கன்யாக்கள்.



விநாயகப் பெருமானுக்கு 'ஐந்து கரத்தான்' என்று பெயர். மற்ற தேவதைகளைப் போல 4 கைகளும், துதிக்கையும் சேர்த்து ஐந்து கைகள்.

எல்லாவற்றுக்கும்மேலாக ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் பஞ்சாக்ஷர ஜபம் செய்ய வேண்டியது மிக முக்கியமானது. மாணிக்க வாசக ஸ்வாமி, சிவபுராணத்தில், ''நமச்சிவாயவாழ்க' என்று சொல்லித் தொடங்குகிறார். அப்பர் பெருமான் ''நற்றுணையாவது நமசிவாயவே'' என்று பாடுகிறார். ஐந் தெழுத்தின் பெருமை எண்ணில் அடங்காதது. ஆகவே ஒவ்வொருவரும் பஞ்சாக்ஷரம் ஜபித்து, சிவபெருமானின் அருளைப் பெற்று உய்வோமாக.

-ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

# சந்திப்பு



## டூ

நவில்

சிவாஜிகளை எடுத்துக் கொள்வோம்.

கொக்கு இறக்கைகளைப் பரப்பிய மாதிரி தலையுடன் 'டான்' சிவாஜி. காமிரா கொஞ்சம் உயரத்திலிருந்து பார்க்கிற போது ரொம்பக் குள்ளமாய்ப் பார்க்கிறது.

பட்லர் ரோலில் பிள்ளை சிவாஜி. கறுப்புச் சட்டியைத் தலையில் கவிழ்த்த மாதிரி ஒரு அசிங்கமானவிக். குஸ்தியும், குடியுமாய் வருகிறபோது இந்த வயதில் இதெல்லாம் ஏன் என்று நமக்குத் தோன்றுகிறமாதிரி அவருக்கும் தோன்றியிருக்க வேண்டும். நடிப்பில் அப்படி ஒரு மெத்தனம்.

ஆரம்பத்தில் ஊர்ப் பெரிய மனிதராய் அடர்த்தி மீசையுடன் வந்து ஐந்து நிமிஷமே இருந்து போகிற சிவாஜி இவர்களை விட நிறைய இடத்தை மனதில் ஆக்கிரமிக்கிறார்.

இன்னொரு கூடுதல் கவர்ச்சியாய் பிரபு. படிக்கப் போன இடத்தில் ராதாவுடன் ஆடுகிறார். நினைத்துக் கொண்டாற் போல் அம்போல் சொல்லிவிட்டு பாசம், அப்பா, அம்மா, அண்ணன், சண்டை என்று அலைகிறார். தாற்காலிகமாய் ஏற்பாடு செய்த அம்மா தான் நிஜமான அம்மா என்று தெரிந்தவுடன் பொங்கி அணைத்துக் கொள்ளும் இடம் இதம்.

சுஜாதாவுக்கு வழக்கம் போல அடிக்குரலில் அழுகிற பாத்திரம். எந்தப் டாத்திரத்தை வேண்டுமானாலும் கொடுங்கள், ஊதித் தள்ளி விடுவேன் என்று அழுத்தமான மனோரமா. குத்துச் சண்டை முடிந்தவுடன் சிவாஜியை வந்து சந்திக்கிற ஸ்ரீதேவியைப் பார்த்து மனக் கணக்குப் போட்டு 'பாத்து ராஜா' என்று சொல்லிக் கொண்டே ஒரு நொடி நொடிக்கிறாரே அந்த இடம் ஒன்று போதும். பிள்ளை சிவாஜிக்கு ஜோடியாய் ஸ்ரீதேவி. நானும் இருக்கிறேன் என்று.

அசர வைக்கிற செட்டிங் ஒவ்வொன்றும். அதுவும் கிளைமாக்ஸ் சண்டைக்காட்சியில் ஏக ரகளை! போதும் போதாததற்கு எம். எஸ். வி. தன் குழுவில் இருக்கிற அத்தனை பேரையும் கூப்பிட்டு, 'கொட்டு மேளம்' 'கொட்டு மேளம்' என்று முடுக்கி விட்டாற்போல் இருக்கிறது. தாங்காமல் நமக்குக் கூட வாயில் 'டிஷ்யூம்–டிஷ்யூம்' வந்து விடுகிறது.

பதினெட்டு ரீல்களா என்று ஆயாசத்தோடு படம் பார்க்க ஆரம்பித்தும், அட இத்தனை சீக்கிரம் முடிந்து விட்டதே என்று அதிசயப்பட வைத்திருப்பவர் சி.வி. ராஜேந்திரன். கெட்டிக்காரர்தான். (கதையைப் பற்றி எந்தக் குறுக்குக் கேள்விகளும் வேண்டாமே).



# இனிய பாரதிராசாவுக்கு...

மறுபடியும் காதல்தான் ஆனால் ஈர்த்துப் பிடிக்கிற நடை.

ஒரு சின்னச் சந்திப்பு, ஒரு சின்ன நெருடல் — இது போதும் இரு உள்ளங்களில் காதல் பிறக்க என்பதில், எங்களுக்கும் சம்மத முண்டு. ஆனால் அதற்கான வழிமுறைகளை உங்கள் கதாநாயகன் தேர்ந்தெடுக்கிற விதம் ஆரோக்கிய இளை

கலைத்து, நாயகன், நாயகியைச் சந்திக்கிற இடம்,

அடுத்தவர்கள் அவர்களின் காதலை ஏளனமாய்ப் பேசியவுடன், எல்லோரும் உறங்கிப் போன பின், பெண் விடுதிக்குப் போய் அவளை அடையாளம் கண்டு எழுப்பி, காதலை 'அழுத்தமாய்' உறுதி செய்து கொள்கிற விதம்,

போன்றவை வித்தியாசப் பார்வையில் மெருகேறி மனசில் பதிகின்றன.

ஆனால் உங்களுக்குத் திருப்தி இல்லை.

தமிழ்த் திரைக்கு இதெல்லாம் போதாது என்ற பயம், இல்லை?

பானுப்ரியாவின் சற்றே கலைந்த கண்களில் ஒரு சுந்தரக் கவர்ச்சி. உணர்ச்சிகளின் உயிர் நரம்புகளைப் புரிந்து கொண்டு ஒத்துழைக்கிற முகம். பிரகாசமான எதிர்காலம்.

வஸந்த் இன்னும் முயற்சி செய்திருக்கலாம். நிலையிலிருந்து நழுவுகிறார்.

பாடல்களில் இளையராஜா இனிமை ராஜாதான்.

புகைப்படக் கோணங்கள் அத்தனையிலும் நேர்த்தி தெரிகிறது. நீங்கள் உங்கள் மனத்தில் கருத்தரித்ததை வெளிக்கொணர்ந்திருக்கும் ஒளிப் பதிவாளர் சேகர் பாராட்டுக் குரியவர்.

மெல்லப் பேசுங்கள்





ஞர்களைத் தப்பிதமான திசையில் திருப்பக் கூடும்.

காதல் என்பதின் தீவிரம் அது ஜனிப்பதில் மட்டும் சுவாசம் பெறாது. மாறாய் அது அடைகாக்கப் படுவதிலும், அழுத்தமான அஸ்திவாரம் ஆக்கப்படுவதிலும் தான் உயிர் பெறும் என்பதற்கு நீங்கள் தேர்ந்தெடுத்துள்ள அடையாள சாட்சிகள் அலங்கார அற்புதங்கள்.

பள்ளிக்கூடத்தை அது முடியும் நேரத்துக்கு முன்பாகவே மணி அடித்துக்

கடைசிப் பகுதியில் மோட்டார் சைக்கிள் விபத்து, நாயகியின் கைக்கு எட்டுகிற தூரத்தில் அவனைக் கலைத்த அந்த டாதசன், அவன் மேல் அவள் பாய்கிற வெறி, மறக்காமல் அவளின் மூச்சுப் பிரிகிற அவலம், என்னும் வியாபாரச் சேர்க்கைகள் — சற்றுக் கசப்பான கற்பனைகள்.

நடுத்தர வர்க்கத்தினரின் கனவுகள் எல்லாமே புகையாய்க் கலைந்துதான் போகும் என்று ஒரு அபத்த தத்துவக் கடிதம்.

காதல்!

இது, சில வாடிக்கையான சிந்தனையாளர்களின் பார்வையில் பஞ்ச காலத்து வயிறு போல் பரிதாபமாகிப் போவதும் உண்டு.

வளமையான கற்பனைகளின் கர்ப்பத்தில் ஜனிப்பான உருவெடுத்து நிற்பதும் உண்டு.

உரக்கவே சொல்கிறோம், நீங்கள் பிந்தைய பிரிவினர், சில சின்னத் தடுமாற்றங்களை விலக்கிவிட்டுப் பார்த்தால்.

நேசத்துடன்

**ஜெயமன்மதன்**

# 25

கார்ஷியா மார்க்வெஸ்ஸின் புத்தகம் கையில் விரித்தபடி இருந்தது. கார்த்திக் இன்னைத் தூணில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்த நாச்சாமியையும் அவன் மடியில் அமர்ந்திருந்த குழந்தையையும் புன்னகையுடன் பார்த்தான்.

வாயிலிருந்த வெற்றிலைச் சாற்றை உட்கார்ந்த நிலையிலேயே திரும்பித் தெரு ஓரமாய்த் துப்பிவிட்டு மறுபடி நிமிர்ந்த நாச்சாமி, ''படுபோக்கிரி'' என்று குழந்தையின் முதுகில் ஒரு தட்டுத் தட்டினான்.

''நேத்துக் கும்மோணத்துக்குப் போயிருந்தேன் வேட்டாத்துக்கு. திரும்பறச்சே இவனும் வருவேன்னு ஒரே பிடிவாதம் பிடிச்சான். வேற வழியில்லாம இதையும், இதைப் பாத்துக்க என் மச்சினியையும் அழைச்சிண்டு வந்தேன். நாளைக்கு பஸ்ஸேத்தி அனுப்பிச்சுடணும். சரியான ராட்சஸன். என்னாலே சமாளிக்க முடியாது.''

இத்தனை பெருமைக்கும் தனக்கும் சம்பந்தம் இல்லேங்கிற மாதிரி குழந்தை வாயை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தது. டிட்டோ நாச்சாமி — உருவத்தில். அதே நிறம். அதே மூக்கு. தடித்த சிவந்த உதடுகள். பார்க்கும் பார்வை கூட அதே! இவனும் வாலிப வயதில் அப்பனைப் போலவே நாரிஜின மெதப்புடன் படித்துறையில் நிற்கும் பெண்களை மேய்ந்தபடி நீரில் மூழ்குவான் என்ற பிரமை ஏற்பட்டது. எப்படி இப்படி அச்சில் வார்த்தாற் போல்...! 'இதன் கர்த்தா நான்' என்கிற பெருமை நாச்சாமியின் முகத்தில்....

''உன் குழந்தைக்கு என்ன வயசு கார்த்திக்?''

அவன் சுய நினைவுக்கு வந்தான்.

''ஒரு வயசாகப் போறது!''

அடுத்தாற்போல்இவன் சுவாபாவிக இராமாந்திரத்துடன், ''யார் ஜாடை?' என்று கேட்டுவிடப் போகிறானோ என்கிற அச்சத்துடன், ''உன் பேரென்ன?'' என்று குழந்தையின் கன்னத்தைத் தட்டினான்.

''ராமு'' என்றது அது அசுவாரஸ்யத்துடன். அவன் உள்ளே சென்று இரண்டு பிஸ்கெட் கொண்டுவந்து கொடுத்தான். விசையைத் தட்டினாற் போல் அவன் முகம்மலர்ந்து ஆர்வத்துடன் கைநீட்டி வாங்கிக் கொள்கையில் அவனுக்குச் சட்டென்று குமாரின் நினைவு வந்தது. பிஸ்கெட்டைக் கண்டவுடன் என்னமாய்க் குதிப்பான்?

அந்தக் கொழு கொழு என்ற பட்டுப் போன்ற உடம்பும் முகத்தின் கொள்ளை அழகும்.... அவனுக்கு லேசாகப் பார்வை மங்கிற்று.

''ராமமூர்த்தி ஆத்திலேதான் உனக்குச் சாப்பாடாக்கும்!''

அவன் திடுக்கிட்டு நிமிர்ந்து நாச்சாமியின் கேள்வியை மெல்லக் கிரகித்துப் பிறகு சிரித்தான்.

''ஆமாம். ஏன்?''

''அவர் அடிக்கடி கும்மோணம் தஞ்சாவூர்னு போயிடுவாரே?''

எத்தனை சின்ன உலகம் என்று இவனுக்குச் சிரிப்பு வந்தது.

''அவர் இல்லாதபோது சாப்பாடு வேண்டாம்னு சொல்வேன். லட்சுமி சேக்காம டிபன் செட்டிலே போட்டு இங்கே கொண்டு வச்சுடுவா!''

நாச்சாமி கண்ணைச் சிமிட்டிச் சிரித்தான்.

''ஜாக்கிரதையா இரு அவகிட்ட.''



# ஒரு சங்கமத்தைத் தேடி..

கார்த்திக்குக்குத்தூக்கி வாரிப்போட்டது.

''எனக்கும் அவளுக்கும்என்ன சம்பந்தம்?''

நாச்சாமி வெற்றிலைச் சிவப்புச் சிரிப்புச் சிரித்தான்.

''சொல்லி வெச்சேன். உனக்கு அவளைப் பத்தி ஒண்ணும் தெரியாதே!''

அவளைப்பற்றியும் தெரியும் உன்னைப்பற்றியும் தெரியும் என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது. சுரீரென்று ஆத்திரம் வந்தது.

''இதைப்பார் நாச்சாமி. நான் ஓய்வெடுக்க இங்கே வந்திருக்கேன். உன்னூர் வம்பு ஏதும் தெரிஞ்சுக்க வேண்டிய அவசியம் எனக்கில்லே!''

''அவசியம் இருக்கோ இல்லையோ தெரிஞ்சுக்கறது நல்லது. நீ அப்புறம் ஒரு வம்பிலேயும் மாட்டிக்கக் கூடாது பார்!''

வாஸந்தி



தன் கோபத்தை மறைத்துக் கொண்டு கார்த்திக் கேட்டான்.

''அனுபவத்திலே பேசறியா?''

துடையைத் தட்டி நாச்சாமி ஒரு தோழமைச் சிரிப்புச் சிரித்தான்.

''நன்னாக் கேட்டே! எங்கப்பா அலறி அடிச்சுண்டு கும்மோணத்துப் பொண்ணைப் புடிச்சுப் போட்டதே இதுக்காகத்தான்.''

''இப்ப மாத்திரம் மாட்டிக்க மாட்டேன்னு என்ன நிச்சயம்?''

''மாட்டேன்'' என்றான் நாச்சாமி நிச்சயமாக. ''அவளுக்கு என் மேலே இன்ட்ரஸ்ட் இல்லே இப்ப!''

ரகசியக் குரலில் சிரித்துக் கொண்டே சொன்னான்.

''இன்ட்ரஸ்ட் இல்லாத பொம்மனாட்டியைத் தொடரதுலே சுவாரஸ்யமே இல்லே. என்னைக் கேட்டா, அவளும் ஆசைப்படணும். அப்பத்தான் சுவாரஸ்யம்.''

திடீரென்று மனத்தின் மூலையை இவனது வார்த்தைகள் தாக்கின. அருவருப்பை ஏற்படுத்தின.

அவன் மேற்கொண்டு பேச விரும்பா வனாய் மடியில் கிடந்த (One Hundred years of solitude) நூறு வருஷத்து மோனத்தைப் பிரித்தான்.

நாச்சாமி ராமுலுவைத் தூக்கிக் கொண்டு கிளம்பினான்.

**அ**ன்று சாப்பிடும்போது லக்ஷ்மி பரிமாறுகையில் நிமிர்ந்து பார்க்கவே கூச்சமாக இருந்தது. சாப்பிட்டதும் அரை நாழிகை கூட நிற்காமல் வீட்டிற்குக் கிளம்பினான்.

முற்றத்து ரேழியில் படுத்தபடி ஆகாசத்தை வெறிக்கையில் குழந்தையின் நினைவுத் தாராவின் நினைவும் ஒரு ஜுர வேகத்தோடு வந்தன. தாராவின் அழகும் துடிப்பும் பேச்சும் லட்சிய ஆவேசங்களும் சுகந்தமாய் நினைவை ஆக்ரமித்தன. 'எப்படிப்பட்ட பொக்கிஷம் எனக்குக் கிடைத்தாள்' என்று நெஞ்சு விம்மிற்று. எந்த முட்டாள்தனப் போதில் அவசரத்தையா வேன்? அசம்பாவிதமாகக் கண் அயர்ந்தேன்? பறக்கிற அவசரத்தில் தளத்தைப் பார்க்கத் தவறிவிட்டேனா? அடி வயிற்றிலிருந்து துக்கம் புரண்டு நெஞ்சை அடைத்தது.

இது எந்த அவசரத்தையினாலோ கவனக் குறைவினாலோ நேர்ந்த சிக்கல் இல்லை என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். ஏதுமறியா பாதசாரியைக் கொடூரமாய்த் தாக்கி வீழ்த்துகிற விதியின் தாக்குதல் இது... அவனைப் பொறுத்தவரை...

''அவளுக்கும் இன்ட்ரஸ்ட் இருந்தாத் தான் சுவாரஸ்யம்!''

அவனுக்கு மனசு ஒரு முறை குலுங்கிற்று. லோபோவின் சித்தாந்தமும் இப்படித்தான் இருந்திருக்குமோ?

''நான் என்ன பண்ணினேன்? நீயாத் தானே வந்தே?'' என்று அவன் சொன்னதாகத் தாரா சொன்னதற்கு இதுதான் அர்த்தமாக இருக்க வேண்டும்.

அவன் சுயநினைவோடு போனானோ, இல்லாமல் போனானோ அவனிடம் போனது நிஜம். அந்த நிஜத்தை உறுதிப்படுத்த சாட்சியம் இருப்பது நிதர்சனம்...

இந்த நிஜத்திலிருந்து தப்பிப்பது எப்படி? இருப்பதை இல்லை என்று ஒரு மாயையை ஏற்படுத்திக் கொள்வது எப்படி? மனசு ஒரேயடியாய்ச் சக்கர வட்டம் அடித்துத் தத்தளித்தது. எந்த வகையிலும் சமாதானமாகாமல், தடம் புரண்டு போய், மீண்டும் பழைய நிலைக்குத் திரும்ப முடியாமற் போனது மாதிரி மிரண்டது..... வெகு நேரத்துக்குக் கண்ணீர் பிரவகித்தது.

குழந்தை தன்னுடன் இருக்கிறாற் போல் பிரமை ஏற்பட்டது. வழுவழுவென்ற அதன் கை தண்ணென்று அவன் மேல் அமர்ந்தாற் போல்... அவன் மெல்லக் கண்ணைத் திறந்தான்.

லக்ஷ்மி மண்டியிட்டு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய முகம் அவனுடைய முகத்துக்கு நேர் எதிரே இருந்தது. அவளுடைய விரல்கள் அவன் கன்னத்தில். அவன் திடுக்கிட்டுச் சரேலென்று எழுந்து உட்கார்ந்தான்.

அவள் அவனைப் பார்த்துப் பரிவா பரிகாசமா என்று புரியாத ஒரு விநோதமான புன்சிரிப்புச் சிரித்தாள்.

''அழறேளா என்ன?'' என்றாள் மென்மையாக.

நிர்வாணமாய்ப் பிடிபட்டாற் போல் அவனுள் ஒரு கூச்சம் ஏற்பட்டது. இந்தக் கிராமம் பூராவும் இவள் அதற்கு வெளிச்சம் போட்டு விடுவாள் என்கிற பயத்தில் அவன்.

''இல்லையே!'' என்றான். அவசரமாக.

தடங் கொடுக்கிற மாதிரி இருந்தது அவளுடைய புன்னகை.

''உங்க மனக் கஷ்டம் என்னன்னு என் கிட்டச் சொல்லலாம்னு சொல்லுங்கோ!''



**யார் கெட்டார்?**

திருநீறிட்டார் கெட்டார், இடாதார் வாழ்ந்தார் என்பது பழமொழி. இதன் உண்மைப் பொருள் திருநீறிட்டு யார் கெட்டார் இடாது யார் வாழ்ந்தார் என்பதாகும்.

வாரியார் கூறக் கேட்டவர்
இ. சுந்தரேசன்

''சொல்றதுக்கு ஒண்ணுமே யில்லே!'' என்று அவன் மழுப்பலாகச் சிரித்தான். ''தூங்கிப் போயிட்டேன் போலிருக்கு. ஏதோ பயங்கரச் சொப்பனம்.''

''அது சரி!'' என்றாள் அவள் அவனை நம்பாத குரலில். ''டிபன் சாப்பிடுங்கோ. ஆறிப் போயிடும்.''

அவள் ஒரு சின்ன வாழை இலையைப் போட்டு, சம்புடத்தில் கொண்டு வந்திருந்த அரிசி உப்புமாவை அதில் வைத்தாள்.

அவள் அவன் எதிரிலேயே தூண் மேல் சாய்ந்து நின்றது அவனுக்கு சங்கோஜத்தை ஏற்படுத்திற்று. தாழம்பூ நிறத்தில் மெல்லிய பாதங்கள் தெரிந்தன. அதற்கு மேல் ஒரு பழைய சின்னாளப்பட்டுப் புடவையின் அரக்குக் கரை விசிறியாய் விரிந்திருந்தது.

''எப்படி இருக்கு?''

''எது?'' என்றான் அவன் திடுக்கிட்டு.

''உப்புமாவைப் பத்தித்தான் கேக்கறேன். பின்னே வேற எதை?'' என்று அவள் சிரித்தாள்.

பற்கள் வரிசையாக வெண்மையாக இருந்தன. முற்றத்தில் நுழைந்த வெய்யில் பட்டுப் பளிச்சிட்டது.

''ஓ? நன்றாயிருக்கே!''

அவள் நின்ற நிலையிலேயே குத்திட்டு உட்கார்ந்து முகவாய்க் கட்டையில் கையைப் பதித்து நமுட்டுச் சிரிப்பாகச் சிரித்தாள். அவளுடைய கன்னங்கள் மாசு மருவில்லாமல் தாழம்பூ நிறத்தில் பளபளத்ததை அப்பொழுதுதான் கவனித்தான். அவள் உட்கார்ந்திருந்த விதத்தில் ரவிக்கை கொள்ளாமல் மார்பகங்கள் திமிறின. அவன் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டு அவசரமாகச் சாப்பிட ஆரம்பித்தான். அவள் என்னவோ சொன்னது சிந்தையில் பதியாமல் சாப்பிட்டு முடித்து இலையைச் சுருட்டி,

'திஸ் வுமன் இஸ் க்ரேஸி' என்கிற நினைப்பில் முகம் சிவக்கக் கொல்லைப்பக்கம் சென்று எறிந்து விட்டு வந்தான். அவள் நீட்டிய காப்பியை வாங்கிக் கொண்டான்.

''நீங்க எதுக்கு இத்தனை சிரமப்படறேள்?'' என்றபடி.

''எனக்கென்ன சிரமம்?'' என்று அவள் சிரித்தாள். ''பொழுது போகாமல் உட்கார்ந்திருக்கேன். இப்பப் பேசறதுக்கு ஆள் கிடைச்சதே பெரிய சந்தோஷமா இருக்கு.''

குரலில் இழையோடிய சோகம் அவனைத் தாக்கிற்று.

''இங்கே உங்களுக்குச் சிநேகிதா யாருமில்லையா?''

திருத்தமான புருவங்களின் நடு மையத்தில் இருந்த மெல்லிய விபூதிக் கீற்று நெற்றியின் வெறுமையை அதிகரித்துக் காண்பித்தது. அவள் தலையை அசைத்து உதட்டைப் பிதுக்கினாள்.

''யா....ருமில்லே! அவாவா கல்யாணமாகிப் புறப்பட்டுப் போயிட மாட்டாளா? என்னைத்தான் ஆணி அடிச்சு வச்சிருக்கு!''

வார்த்தைகளில் கோபமா வெறுப்பா என்று புரியாத ஒரு த்வனி இருந்தது.



வள்ளல்களின் கொடைத் திறத்தை மேகத்திற்கு ஒப்பிடுவதுண்டு. கர்ணனை அப்படி ஒப்பிட முடியாது. மேகம் கொடுக்க வேண்டிய நேரத்தில் கொடுப்பதில்லை. கர்ணனோ கொடுக்க வேண்டிய நேரத்தில் கொடுக்காமல் இருந்ததில்லை.

—கீரன் சொற்பொழிவில் கேட்டது எஸ். கண்ணையன்.

அவள் அவனை நிமிர்ந்து நேர்க்கமாய்ப் பார்க்கையில் கண்கள் அகன்று பல ஜன்மத்து சோகத்தை ஏந்தி நிற்கிற சாகரங்களாய்த் தோன்றின.

''ஒரு வருஷமில்லே, இரண்டு வருஷமில்லே, பன்னிரண்டு வருஷமா உட்காத்தி வச்சிருக்கு.''

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான். அந்த மதர்த்த உடம்பையும் சாகஸ உதடுகளையும் திமிர்ந்த பார்வையையும் பார்க்கும் போது நிச்சயமாய் இவளால் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது என்று நினைக்கத் தோன்றிற்று.

''உங்க வீட்டுக்காரர் எப்படிச் செத்துப் போனார்?''

அவள் வாய் விட்டுச் சிரித்தாள்.

''எனக்குன்னு வீடு ஏற்படாதபோது வீட்டுக்காரர்னு எப்படிச் சொல்ல முடியும்?''

''எனக்குப் புரியல்லே!''

''கார்த்தாலே கல்யாணமாச்சு. சாயந்திரம் கிளம்பிப் போயிட்டார். பட்டாளத்திலே வேலையா யிருந்தார். 'உடனே திரும்பணும்னு' தந்தி வந்துடுத்து. ஜானவாசத்தும்போது. தாலியைக் கட்டிட்டுப்போயிட்டார்னு இந்த அசட்டுப்பெரியவாள்ளாம்...''

அவள் வாக்கியத்தை முடிக்காமல் அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

''அந்த ஆள் முகத்தைக் கூட நான் சரியாப் பாக்கல்லே. பங்களா தேஷ் யுத்தம்னு சொன்னா. அவர் கிளம்பிப் பத்தாம் நாள் தந்தி வந்துடுத்து ஆள் க்ளோஸ்னு!''

அவன் அதிர்ந்து போய் அவளைப் பார்த்தான்.

''அடப் பாவமே!''

''யாருக்குப் பாவம்?'' என்றாள் நிதானமாக.

''உங்களுக்குத்தான்!''

'ஆ''என்று அவள் வெறுப்புடன் சிரித்தாள். ''இந்த ஊர்லே என்னைப் பத்திச் சொல்லுங்கோ, 'மானம் கெட்ட முண்டை'ம்பா.''

அவன் சங்கடத்துடன் தலையைக் குனிந்து கொண்டான். இவளுடன் பேச்சுக் கொடுத்ததே தப்பு என்ற நினைப்புடன்.

''நீங்களே சொல்லுங்கோ, என் புருஷன் எனக்குத் தாலி கட்டினதோடு சரி. அவனுக்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்லே மத்தபடி. என்னைப் பொறுத்தவரை எனக்கு முன் பின் தெரியாதவன். அவனுக்காக நாயேன் துக்கம் காக்கணும்? அவன் போறச்சே எனக்குப் பதிமூணு வயசு! நான் பூ வெச்சுக்கக் கூடாது. கண்ணாடி வளையல் போட்டுக்கக் கூடாது. நெத்திக்கு இட்டுக்கக் கூடாது—

ஏன்? நான் என்ன தப்பு பண்ணினேன்?''

அவள் குரலில் பன்னிரண்டு வருஷத்து ஏக்கமும் ஆக்ரோஷமும் தெரிந்தது.

''அதே மாசம் பக்கத்தாத்து கிட்டப்பா ஆம்படையா செத்துப் போனா. அடுத்த மாசம் கிட்டப்பா ஜாம் ஜாம்னு இன்னொரு கல்யாணத்தைப் பண்ணிண்டு திண்ணையிலே வெத்தலையைக் குதப்பிக்கிட்டிருக்கார்! பதினைந்து வருஷம் ஒத்தியோட சம்சாரம் பண்ணவர்! ஒண்ணுமே அனுபவிக்காத என்னை மூளியா உக்காத்தி வச்சுட்டா, எப்படி இருக்கு நியாயம்?''

அவன் பதிலே சொல்லாமல் இவளுடைய கோபம் மிக நியாயமானது என்கிற பச்சாதாபத்துடன் அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அவள் இப்பொழுது தலையைக் குனிந்தபடி பேசினாள்.

''அந்தக் கட்டுப்பாடெல்லாம் எனக்குத் தாங்காது. திருட்டுத்தனமா அலங்காரம் பண்ணிப்பேன், பூ வெச்சுப்பேன். கண்ணாடி வளையல் அடுக்கிப்பேன். அம்மா அடிப்பாள். அதையும் மீறிண்டு என் ஆசை வளரும்.''

அவள் நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். அவளுடைய கண்கள் நிஜ சாகரங்களாக நீர் கோத்து நின்றன. அவள் விருக்சென்று எழுந்தாள்.

''நியாயமாக் கிடைக்க வேண்டியது கிடைக்கல்லேன்னா திருட்டுத்தனம்தான் செய்யத்தோணும். இதுக்கு நான் பொறுப்பில்லே! இந்தத் திமிர் பிடித்த சனங்கதான் சாரணம்!''

எத்தனை கோபம் இவளுக்கு என்ற வியப்புடன் அவன் அவளைப் பார்த்தான்.

அவன் எண்ணத்தைப் புரிந்து கொண்டவள் போல் அவள் சொன்னாள்.

''குத்துக் கல்லாட்டாம் பெண்டாட்டி இருக்கா ஒவ்வொருத்தனுக்கும். அதோட, வெய்க்காட்டிலே ஒருத்தி, மேலத் தெருவிலே ஒருத்தி. இவனுக்கெல்லாம் என்னைப் பத்திப் பேச என்ன யோக்கியதை இருக்கிறது?''

அவள் கிளம்பிப் போன பிறகும் கொஞ்ச நேரத்துக்கு அவளுடைய ஆங்காரம் புகை மூட்டமாய் அங்கே நின்றாற் போல் பிரமை ஏற்பட்டது.

''பௌதீக வித்தியாசம்தான் பெண்ணின் பலவீனத்துக்குக் காரணம்.''

அந்தப் பலவீனத்தையே இவன் தன் ஆயுதமாக ஆக்கிக் கொண்டிருக்கிறான். இவளும் வேஷதாரிகளைக் கண்டு வெறுக்கிறாள். அவர்களுக்குப் புரியக் கூடிய பாஷையில் தன் எதிர்ப்பைக் காண்பிக்கிறாள். ஆனால் அவள் அதில் திருப்தி அடைந்திருப்பாள் என்று தோன்றவில்லை. அந்த கார்த்திக் கண்களில் தேங்கி நின்ற நீரைப் பார்த்தால்...

திடீரென்று அத்தையின் நினைவு வந்தது. எத்தனை வித்தியாசம் இரண்டு பேருக்கும்! ஆனால் அத்தை ஒரு வருஷம் சம்சாரத்தை அனுபவித்தவள். பழைய தலைமுறையைச் சேர்ந்தவள், சரீரத்தின் பவித்திரத்துக்கு முக்கியத்துவம் கொடுத்தவள். ''இது எனக்கு ஏற்பட்ட விபத்து என்றுதான் நினைக்கிறேன். இதனால் எனது பவித்திரமோ கற்போ குலைந்து போனதாக நான் நினைக்கல்லே.''

தீர்மானமான வார்த்தைகளின் நினைவில் மனசு குழுங்கிற்று.

அத்தை இந்த வார்த்தைகளைக் கேட்டால் என்ன சொல்வாள்? ஒரு உதாரண மனுஷியாக அவன் பாவித்து வரும் அத்தை....?

அத்தையைப் பற்றி நினைத்த அந்தத் தருணத்தில் அவளிடமிருந்து கடிதம் வந்தது. அவனைக் கவலை கொள்ளச் செய்தது.

(தொடரும்)

குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப் படணும் என்று ஒரு பழமொழி உண்டு. ஆனால் உண்மையான பழமொழி அதுவல்ல. குட்டுப் பட்டாலும் மோதுகிற கையால் குட்டுப் படணும் என்பதே சரியான பழமொழி. அதாவது தன்னைக் குட்டுகிறவன் தன் சக்திக்கு நிகராக மோதுகிற தகுதி உள்ளவனாக இருக்க வேண்டும் என்பதே அதன் அர்த்தம். நாளடைவில் அந்தப் பழமொழி இப்படி ஆகி விட்டது.

—எஸ். பி. சுப்பையா

(தென்காசி திருக்குறள் விழாவில் குன்றக்குடி அடிகள் சொல்லக் கேட்டவர்.)





## தமிழகத்தின் சிறப்புகள் எவை, எவை?

கோவில்,
கோபுரம்,
சங்கீதம்,
நாதஸ்வரம்,
பரதநாட்டியம்,
இட்லி,
தோசை,

# நரசுஸ் காபி!



ஜீவனுள்ள ஒரே காபி!

# நரசுஸ்

"தெர்மலோ" காபி!



**நரசுஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்:
தமிழ்நாடெங்கும்.

ADWAVE · NCC · 2165

# குறுக்கேயும் ஒரு வழி

## சாருகேசி

சங்கரி, பிரபாகர் வருகைக்காகக் காத்திருந்த அந்தப் பத்து நிமிஷங்களில் அவள் மனக் கிடந்து அலை பாய்ந்ததையும் தவிப் பாய்த் தவித்ததையும் அந்தப் பிரும்மாண்ட மான ஆபீஸ் கட்டட வாசலில், வீட்டுக்குப் போகும் பரபரப்பில் இருந்த பலர் கவனித்திருக்க முடியாது.

மணி சரியாக ஐந்து நாற்பது.

யானைக் காது மாதிரி பாண்ட் நுனிகள் விசிற, பரபரப்புடன் தூரத்தில் பிரபாகர் வருவது தெரிந்தது. பாவம், அவனுக்கும் ஆபீஸ் முடிந்து பஸ்ஸைப் பிடித்துத்தான் வரவேண்டும்.....



கயா நகரில் புத்தர் கோயிலைப் போலவே புகழ் பெற்ற விஷ்ணு பாதம் கோயில் இருக்கிறது. விஷ்ணுவின் பெரிய பாதங்களிலிருந்து நீர் சொட்டுகிறது. எப்படி, எங்கிருந்து சொட்டுகிறது என்பது தெரியவில்லை. கீழே விழுந்த நீர்த் துளி உலர்ந்ததும் மறுபடியும் நீர் சொட்டுகிறது.

—வடநாடு யாத்திரைசென்று திரும்பிய வி. என். சிதம்பரம் சொல்லக் கேட்டவர் இசை முத்து; படம்: மஹேஷ்

பிரபாகர் சங்கரியை நெருங்கி, ''என்ன அக்கா, எதுக்குப் போன் பண்ணினே?'' என்றான் காதோரங்களில் வியர்வை வழிய.

முதலில் சங்கரிக்கு ஏதும் பேச வராமல் தொண்டை அடைத்தது. விழி நுனிகளில் நீர் துளிர்த்து நின்றது. ''பிரபு!'' என்றவள், ஒரு துணை கிடைத்த மாதிரி அவன் கரங்களைப் பற்றிக் கொண்டாள்.

''அழாதே அக்கா. போகிற வருகிறவர்கள் பார்க்கிறார்கள்... நட. ஏதாவது ஒரு ஓட்டலுக்குப் போய்ப் பேசுவோம்.''

சங்கரிக்கு அந்த நிமிஷம் சற்று ஆறுதலாக இருந்தது. தன்னைவிட நாலு வயது சிறியவனான இருபத்தியாறு வயது பிரபாகர்; எந்த விஷயத்தையும் துணிச்சலாகவும், சாமர்த்தியமாயும் செய்யும் தம்பி. அவனது வெளிப்படையான சுறுசுறுப்பும், திடகாத்திரமான தேகமும் அவளை எப்போதும் காக்கத் தயாராய் இருப்பது போல உணர்ந்தாள்.

'டிரைவ்-இன்'னுக்கு வந்தபோது கூட்டம் அதிகமாயிருக்கவில்லை. மூலையில் இருந்த நாற்காலிகளை இழுத்துப் போட்டுக் கொண்டு சர்வரிடம் தோசையும், காப்பியும் கொண்டு வரச் சொல்லிவிட்டு நிமிர்ந்தான் பிரபாகர்.

''இப்போது சொல்லு அக்கா!''

''அவர் மோசம் பண்ணிட்டார்டா பிரபு!'' என்று துக்கம் மேலிட விம்மினாள் சங்கரி. ''உன் அத்தான் யாரோ ஒருத்தியுடன் ரொம்பப் பழக்கமாயிருக்கிறார். சதா அவளுடன்தான். வீட்டுக்குக் கூட நேரம் கழித்துத்தான் வரார்...''

பிரபுவால் ஒரு நிமிஷம் நம்ப முடியவில்லை. ''அத்தானா!''

''அவள் எப்படி அவருக்குப் பழக்கமானாள் என்று தெரியலே. ஆனால் இரண்டு பேரும் சேர்ந்து இருக்கிறதை ஒரு நாள் அவர் ஆபீஸ் வாசலில் பார்த்தப்புறம்தான் விஷயமே தெரிந்தது எனக்கு.''

''அழகா இருப்பாளா?'' என்றான் பிரபு. ''ஐ மீன், பார்க்கறதுக்கு உன்னை விடக் கவர்ச்சியா இருப்பாளா?''

''ஒகோன்னு அழகில்லே. ஆனா சின்ன வயசுதான் இருக்கும் போலிருக்கு!''

பிரபாகருக்குக் கேள்வி கேட்கக் கஷ்டமாயிருந்தது. ''உன்கிட்ட எல்லாம் அத்தான் எப்படி நடந்துக்கறார்?''

சர்வர் வந்து தோசையை வைத்து விட்டுப் போனார்.

''கல்யாணமான இந்த அஞ்சு வருஷத்திலேயே நான் அவருக்கு வேண்டாதவள் ஆயிட்ட மாதிரி நடந்துக்கறார். ஆனா அது இந்த ரெண்டு மூணு மாசமாத்தான்... அப்போலேர்ந்துதான் இவள் சிநேகமோ என்னவோ? பிரபு, அம்மா கிட்டே இதைச் சொல்லாதே. உடைஞ்சு போயிடுவா'' என்று அழுதாள் சங்கரி.

''என்னை என்ன செய்யச் சொல்றே அக்கா? அவர் கையையும் காலையும் கட்டி வச்சு நாலு சாத்துச் சாத்தட்டுமா?'' என்றான் பிரபாகர். ஆவேசம் அவன் உடலில் சிறிது படபடப்பை உண்டாக்கிற்று.

''அப்படி ஏதும் செய்துவிடாதே. உனக்குப் புண்ணியம் உண்டு.'' என்றாள் சங்கரி. அவள் தட்டிலிருந்து தோசை விண்டு எடுக்கப்படாமலே இருந்தது. அதற்குள் சர்வர் காப்பி கொண்டு வைத்துவிட, மடக் மடக் கென்று அதைக் குடித்து வைத்தான்.

''முரட்டுத்தனமாய் அவரிடம் பேசி, நடந்து கொள்ளாதேடா, கோபாவேசத்தில் நீ ஒன்றும் என் விஷயத்தில் தலையிடாதே' என்று வெளியே தள்ளினாலும் தள்ளிவிடுவார். நீங்கள் பண்ணுவது நியாயமா என்று கேள். என் வாழ்க்கையை நரகமாக்குவது அவர் திட்டமா என்று கேள்!''

''அப்படியெல்லாம் சாதாரணமாகக் கேட்டால் இந்த மாதிரி ஆசாமிகள் சீரியஸ்ஸாய் எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.''

''பின்னே எப்படிப் பண்ணுவதாய் உத்தேசம்?''

''லெட் மீ ஸீ. லீவு போட்டுவிட்டு ஒரு நாள் அவர் ஆபீசுக்குப் போய் நேரில் பேசிப் பார்க்கிறேன்!'' என்றான் பிரபாகர்.

பிரபாகர் லிஃப்டில் நுழைந்து நாலாவது மாடியில் வந்தபோது, அத்தான் பாஸ்கர் லிஃப்டுக்காகக் காத்துக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு, லிஃப்ட் நின்றதுமே சர்சரென்று கொலாப்ஸிபிள் கேட்டை விலக்கிக் கொண்டு வெளியே வந்தான்.

''அடேடேடே... பிரபுவா! ஏது இப்படி? லீவா என்ன?'' என்று பாஸ்கர் கேட்ட போது ஒரு புன்னகை மட்டுமே செய்தான் பிரபு.

''உங்களைத்தான் பார்க்க வந்தேன் அத்தான். எங்கே, ஆபீஸ் முடிவதற்குள் கிளம்பி விட்டீர்கள்? ஐ'ம் லக்கி. ஒரு நிமிஷம் தாமதித்திருந்தால் கூடப் பார்த்திருக்க முடியாது உங்களை!''

''நான் அர்ஜெண்டா வெளியே கிளம்பிட்டிருக்கேன். என்ன விஷயம்?''

பாஸ்கரைப் பார்த்தான் பிரபாகர். அழகாக வாரிய தலை. ட்ரிம்மான, டிடர்ஜென்ட் வெளுப்பில் உடை. மோனோலிஸா கூலிங் கிளாஸ். படு ஷோக்காய்த்தான் இருக்கிறார்.

''உங்கள் எக்ஸ்ட்ரா-மாரிடல் ரிலேஷன் ஷிப் பற்றித்தான்... ஹூ இஸ் தட் கேர்ல்?''

பாஸ்கர் ஒரு நிமிஷம் தாக்கப்பட்டவன் போல் காணப்பட்டாலும், சமாளித்து ''அது என்னோட பர்சனல் விஷயம். நீ கேட்க வேண்டியதில்லே!'' என்றான் சூடாக.

''எது உங்களோட பர்சனல் விஷயம்? என் அக்கா சங்கரி உங்க மனைவியா இருக்கிற வரை அது உங்கள் பர்சனல் விஷயம் மட்டுமில்லே. சொல்லுங்க, யார் அது? எத்தனை நாளா இந்தப் பச்சைத் துரோகம்?''

''என்னால அவ்வளவு சீக்கிரம் அந்தப் பெண்ணை ஒதுக்கிட முடியாது பிரபாகர். லீவ் மீ அலோன் ப்ளீஸ்!''

''சீ!'' என்று சீறினான் பிரபு. ''கல்யாணமாகி அஞ்சு வருஷமாகலே. அதுக்குள்ள இந்தத் துரோக நாடகமா? வெட்கமா யில்லே? போகட்டும்... இந்தப் பெண்ணை எப்படியாவது கட் பண்ணுங்க. அக்காவைக் கண் கலங்காமப் பார்த்துக்குங்க. அம்மாவுக்குத் தெரிஞ்சா அவ உசிரையே விட்டுடுவா!''

''இந்த ரெண்டு மாசத்தில மாலதிகிட்ட ரொம்பப் பழகிட்டேன்!'' என்றான்.

''வெட்கமாயில்லே, இதைச் சொல்ல?''

பாஸ்கரின் மௌனத்தில், லிஃப்ட் மேலே 'உஸ்'ஸென்று ஏறிய ஓசை மட்டும் கேட்டது.



கோயிலிலிருந்து வெளியே வரும்போது மணி அடிக்கக் கூடாது. இதனால் கோயிலுக்குப் போன பலன் போய்விடும்.

பார்வதி இல்லாத சிவனை வழிபடக் கூடாது.

கைவிரல்களை நெட்டி முறிப்பது பாவமான செயல்.

எரியும் விளக்கை வாயினால் ஊதி அணைக்கக் கூடாது.

குழந்தைக்கு ஒரு வயதாகும் வரையில் தலையில் பூ வைக்கக் கூடாது.

யார் வீட்டிலாவது துக்கம் விசாரிப்பதெனில் ஞாயிறு அல்லது வியாழன் தவிர வேறு நாட்களில் போகக் கூடாது.

ஒரு குடும்பத்தில் எல்லோரும் ஒரே நேரத்தில் சிரிக்கக் கூடாது.

—லட்சுமி சிவம்.

# சுந்தரமான டாசெல் சுகாதார சாதனங்கள்



குளியல் அறைகள், கழிப்பு அறைகள் ஆகியவற்றிற்குத் தேவையான வாஷ் பேசின்கள், கமோர்டுகள், பீங்கான் தகடுகள் போன்ற சுகாதார சாதனங்களைப் பளிங்கு போன்ற பளபளப்புடன், கீறல் விழாத வகையில், நீண்டகாலம் உழைக்கும்படியாகத் தயாரிக்கிறோம்.

**TACEL** தமிழ்நாடு செராமிக்ஸ் லிட்.,
25. செனடாஃப் ரோடு, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.

EP-TC-102-83

''அந்தப் பொண்ணு யாரு? அவ் ஆபிஸ் விலாசம் தாங்க. இல்லேன்னு வீட்டுக்கு வழி சொல்லுங்க.''

''நீ அங்கே போய்க் கலாட்டா எல்லாம் பண்ணுவே.... போ, நானே எப்படியாவது ஒதுங்கிக்கப் பார்க்கறேன்.''

''நீங்க ஒதுங்கத்தான் வேணும். ஆனா அதுக்கு முன்னால அவ அட்ரஸைக் குடுங்க!'' ஒரு துண்டுக் காகிதத்தில் அவள் விலாசத்தை எழுதிக் கொண்டு சரேலென்று அங்கிருந்து கிளம்பினான் பிரபாகர்.

மாம்பலத்தில் வீட்டு வாசலிலேயே மாலதியைப் பார்த்து விட்டான் பிரபு. இவளாகத்தான் இருக்க வேண்டும்..உள்ளே யாராவது இருக்கிறார்களோ என்னவோ தெரியவில்லை. ''ஹலோ!'' என்றான் ஓர் ஆரம்பத்திற்கு.

''எஸ்?''

பரவாயில்லை. பெரிய கண்கள். அவற்றையே லைவாக வீசியிருப்பான் போலும்.

''நீதான் மாலதியா?''

''எஸ். நீங்க யாரு?''

''நான் பாஸ்கரோட மச்சினன். என் பெயர் பிரபாகர் — பிரபு. உன் அப்பாவைக் கூப்பிடு.''

அவள் பாஸ்கரின் பெயரைக் கேட்டதுமே விதிர்விதிர்த்ததுஉண்மை.''என்னவிஷயம்?'' என்று கேட்டபோது குரல் நடுங்கிற்று.

''ரொம்ப முக்கியமான, ஏன் சீரியஸ்ஸான விஷயம். உனக்கே தெரியும். என் அக்கா சங்கரியின் வாழ்க்கையோட சம்பந்தப்பட்ட விஷயம்.''



சாக்ரட்டீஸ் ஒரு வீடு கட்டினார். அதை வந்து பார்த்த ஒருவர், ''அறை என்ன இவ்வளவு சிறியதாய் இருக்கிறது இப்பக்கம் அப்பக்கம் திரும்பக் கூட இடமில்லையே'' என்றார்.

சாக்ரட்டீஸ் ''அறை சிறியதாய் இருந்தாலும் பாதகமில்லை. அது நிறையவாவது உண்மையானநண்பர்கள் எனக்கிருந்தால் போதும்'' என்றார்.

—இசை முத்து

''ஓ.....ஓ... மிஸ்டர் பாஸ்கர் உங்க அக்காவைப் பத்தி 'எதுவும் என்கிட்டே சொன்னதில்லே... எனக்குப் பயமாயிருக்கு... என் அப்பா அம்மா கிட்ட எதுவும் சொல்லிப் பயமுறுத்திடாதீங்க...ப்ளீஸ்...''

''மிஸ் மாலதி, எனக்கு இரண்டே இரண்டு கேள்விகள்தான் உன்னைக் கேட்கணும். அப்புறம் உன் அப்பா, அம்மாவைப் பார்த்தால் போதும். சொல்லு. என் அத்தானிடம் உன்னைப் பூரணமாகக் கொடுத்துட்டியா?''

''இல்லே!'' என்றாள் காது மடல் சிவக்க.

''வெரி குட். இரண்டாவது கேள்வி. கேட்கிறதுக்கு மன்னிக்கணும். என்னைப் பிடிச்சிருக்கா உனக்கு?''

விக்கித்துப்போய் நின்றுவிட்டாள் மாலதி. அவனை ஏற இறங்கப் பார்த்தாள். ஆண்மை மட்டுமல்ல, நேர்மையும் அவன் தேகத்திலும் பார்வையிலும் தெரிந்தது.

''சொல்லு. எனக்கு என் அக்காவோட வாழ்க்கை முக்கியம். அத்தான் அப்படித் தறிகெட்டு ஓடறவர் இல்லேன்னு தெரியும். ஆனாலும் ஏதோ ஒரு விக் மோமெண்ட்டுலே உன்னைப் பிடிச்சிருக்கார். உனக்குப் யோசனை பண்ண அன்னிக்கு அவகாசம் இருந்திருக்காது. மாலதி, இப்போ யோசிச்சுச் சொல்லு. என் அத்தானை உன்கிட்டேயிருந்து விலக்கறதுக்கும், என் அக்கா சங்கரியோட வாழ்க்கை பாழாகாமல் இருக்கறதுக்கும் எனக்கு இது ஒண்ணுதான் வழி. என்னைப் பிடிச்சிருக்கா?....''

''பாஸ்கர் என்னிடம் சண்டைக்கு வந்தாரனா?''

''கல்யாணத்துக்கு அப்புறம் நீ என்மனைவி. அதாவது பாஸ்கரின் மனைவியின் தம்பி பெண்டாட்டி. உன் பதில் என்ன? என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள உனக்குச் சம்மதமா?''

''சம்மதம்!''

விஷயம் இவ்வளவு சீக்கிரத்தில் முடிந்து விடும் என்று பிரபு எதிர்பார்க்கவில்லை. பாஸ்கரை ஒரு மாதிரி சமாளித்து விட்டாலும் மாலதி அழுது ஆகாத்தியம் பண்ணுவாள் என்று எதிர்பார்த்தான் பிரபு. ஆனால் பெண் புத்திசாலி போலிருக்கிறது. மணமான ஓர் ஆணின் நிரந்தரமற்ற, எதிர்ப்புக்கள் நிறைந்த நட்பைவிட, மணமாகாத—தனிச்சல் மிக்க ஒரு வெளிப்படையான இளைஞனின் கரங்களை மண மேடையில் பலர் அறியப் பற்றுவது நல்லது என்று அந்தக் கண நேரத்திலேயே அவள் தீர்மானித்திருக்க வேண்டும்.

அம்மாவிடம் கல்யாணத்துக்குப் பெண் பார்த்தாயிற்று. நான் மட்டும் பார் என்று சொல்ல வேண்டும்.

சங்கரியிடம், 'அக்கா, உன் வாழ்க்கையில் குறுக்கிட்ட ஒரு தடைக் கல்லைச் சாமர்த்தியமாய் ஒதுக்கிவிட்டேன்' என்று சொல்ல வேண்டும்.

மாலதி முன்னே செல்ல, பிரபாகர் அவளுடன் உள்ளே நுழைந்தான்

என்னுல் அந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லே. செய்தி, செவி வழியாக உள்ளே நுழைந்து, நெஞ்சில் இறங்கும் வரை அதன் தீவிரம் புரியவில்லே. சரியாகப் புரிந்து கொண்டபோது 'சுள்'ளென்று வலித்தது. அந்த வலி காயமாக மாறிக் கண்களில் நீராக எட்டிப் பார்த்தது.

''ஏன் ஆனந்த் பேசலே?''

எதிரே நின்ற அவரைப் பார்க்க எனக்குத் தைரியமில்லே. ''என்ன பேசணும் அங்கிள்?'' குனிந்த தலேயை நிமிர்த்தாமல் கேட்டேன்.

''நான் சொன்னதை நீங்க நம்பலியா? நம்ம பைரவி ஓடிப்போயிட்டா ஆனந்த். எந்த அனுமானங்களுக்கும் இடம் கொடுக்காம, திடமா, தெளிய எழுதி வச்சுட்டு நடந்து போயிருக்கா.. இதோ இந்தக் கடிதாசு!''

நீட்டிய கடிதத்தைக் கை நடுங்கப் பெற்றுக் கொண்டேன். 'நறுக்'கென்று நாலே வரி.

'ராம் இல்லாமல் என்னுல் வாழ்க்கையை நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லே. அனுமதியைக் கேட்டேன். கிடைக்கவில்லே. எடுத்துக்கொள்கிறேன்'.... பைரவி.

''அங்கிள்.... இது.....?''

''காலேல பைரவியோட படுக்கைல இருந்தது.''

''அவளேக் கடைசியா எத்தனே மணிக்கு நீங்க பார்த்தீங்க அங்கிள்?''

''அதெல்லாம் எதுக்கு ஆனந்த்? எற்கனவே முடிவு செஞ்சபடி புறப்பட்டுப் போயிருக்கா. அவ குழந்தை யில்லே. வயது பதினேழு!''

''அதனுல சொல்றேன் தேடலாம்னு. அவ மைனர். இது சம்பந்தமா நாம நினேச்சா போலீசைக் கூட நாடலாம். இது காதல் இல்லே. புரியாத ஃபிஸிகல் அட்ராக்ஷன். தோலோட அவசரக் கிளர்ச்சி. தேடிப் புடிச்சுப் புரிய வைக்கணும்.''

''வேணும் ஆனந்த்!''

''தேடிப பிடிக்க வேணும்னு எதுக்குச் சொல்றீங்க? எல்லாமே வெறுத்துப் போன மாதிரி ஏன் பொய் பேசறீங்க? உங்க மனசை ஏன் நீங்களே ஏமாத்திக்கணும்? பைரவியை

# சுருதி-பேதம்



விட்டு உங்களால் அரை நொடி பிரிஞ்சிருக்க முடியுமா?''

என் தோளை இறுகப் பிடித்துக் கொண்டு தேம்பித் தேம்பி அழத் தொடங்கினார்.

''அங்கிள், என்ன இது? நீங்க ஒரு ஆம்பளை நினைவிருக்கட்டும்!''

''இப்ப நான் ஒரு தகப்பன் ஆனந்த்!''

''நான் என்னப்பா அவளுக்குக் குறை வச்சேன். ஏம்பா இப்படிப் பண்ணினா?''

''.......''

''அவ முழுசா எனக்குக் கிடைப்பாளா ஆனந்த்?''

''அங்கிள், யூ ....மீன்.....?''

''என் பொண்ணை அவன் சேதப்படுத்திட்டா?''

''நோ அங்கிள், அவளை அவன் கடத்திட்டுப் போகல்லே. இவளா இஷ்டப்பட்டுப் போயிருக்கா. மோர் ஓவர், போலீஸை நாம தேடினா, அவுங்க முன்னிலையில இவ சொல்ற சாட்சி நம்மைத் தலை குனிய வைக்கும்.''

''விட்டுரலாங்கறியா?''

''இல்லை, நிதானமாச் செயல்படணும்.''

''அவ எடுத்துக்கிட்டது அனுமதியை மட்டுமல்ல, முப்பது சவரன் நகையையும், ரெண்டாயிரம் பணத்தையும்...''

''வாவ்! இதை முன்னாலேயே ஏன் சொல்லலை? வெல், நீங்க போய் ரெஸ்ட் எடுத்துக்குங்க அங்கிள். கூடிய சீக்கிரம் பைரவியைக் கொண்டு வந்துரலாம்.''

இன்றைய, நேற்றையப் பழக்கமா? மூன்று வயது பைரவி முதல் நேற்றைய நிமிஷம் வரை எத்தனை நிலைகளில் அந்தப் பெண்ணைப் பார்த்திருக்கிறேன்.

சாப்பிட்டுக் கொண்டேயிருந்தால் வயிறு வலிக்கும்
நின்று கொண்டேயிருந்தால் கால் வலிக்கும்.
உட்கார்ந்து கொண்டேயிருந்தால் கண் வலிக்கும்.
ஆனால்,
நல்ல விஷயங்களைக் கேட்டுக் கொண்டே யிருந்தால் காது வலிக்குமா? வலிக்காது.
—வாரியார் வானொலிப் பேச்சைக் கேட்டு
எழுதியவர்: எஸ். கண்ணன்



போன மாதம் என்னிடம் அந்தச் செய்தியைச் சொன்னவளும் அதே பைரவிதான்!

''ஆனந்த் உங்க கிட்டக் கொஞ்சம் தனியாப் பேசணும்.''

''நான் தனியாத்தானே இருக்கேன்?''

''நான் ஒருத்தரை 'லவ்' பண்றேன்.''

''பைரவி, காதல்னா முதல்ல அர்த்தம் தெரியுமா உனக்கு?''

''ஆழமான நேசம்.''

''அப்படீன்னா என்னையும் நீ காதலிக்கிறதா எடுத்துக்கலாமா?''

''ஓ... நோ, நீ என்னோட ஸ்நேகிதன். எனக்கு வழி காட்டி, எனக்கு எல்லாமே! இதுக்குப் பேரு காதல் இல்லை. ஆனால் ராமோட நான் வெச்சிருக்கிறது வேற!''

''யார் அது? எங்க வேலை பார்க்கறான்?''

''படிச்சுட்டு எந்த வேலையும் இன்னும் கிடைக்கலை. கிடைச்சிடும்.''

''ஜோஸ்யமா?''

''இல்லை, நம்பிக்கை.''

''நான் அவனைப் பத்தி விசாரிக்கணும். எனக்குத் திருப்திப்படணும். அட்ரஸ் தா.''

''தெரியாது.''

''முகவரி இல்லாத முகத்தை நம்பறியா பைரவி. நீ சின்னக் குழந்தை. எது சுடும்னு உனக்குத் தெரியாது.''

''அவரைப் பிரிஞ்சு என்னால இருக்க முடியாது. வாழ்வு இல்லேன்னா சாவை ரெண்டு பேருமா சந்தோஷமா ஏத்துப்பம்!''

இது சினிமாக் கோளாறு என்று புரிய எனக்கு வெகு நேரம் பிடிக்கவில்லை.

அங்கிளிடம் சொன்னேன்.

''என்ன பைரவி, ஆனந்த் என்னவோ சொல்றானே! உண்மையா?''

''ஆமாம் டாடி!''

''சரி, விட்டுத் தள்ளு.''

''டாடி, இதுக்கு என்ன அர்த்தம்?''

''நாங்க விசாரிச்சிட்டோம். எங்களுக்குத் திருப்தியில்லை. அவனை மறந்துரு.''

''டாடி?''

''நோ மோர் எக்ஸ்பிளனேஷன்ஸ்!''

அனுமதி கிடைக்காது என்று தீர்மானித்து விட்டாள் போலும். படிப்படியாக ஆலோசனை செய்திருக்கலாம். புறப்பட்டுப் போய் விட்டாள்.

அந்த முப்பது சவரன் என்னை ரொம்பவும் உறுத்தியது.

பரபரப்பாக ஓடி வந்தார் அங்கிள்.

''என்ன அங்கிள்?''

''அவங்க கோவில்பட்டில ஒரு லாட்ஜில இருக்கிறதா தகவல் கிடைச்சிருக்கு. சாயங்காலம் அஞ்சு மணிக்குப் பார்த்ததா ஒருத்தர் ஃபோன் பண்ணினார்.''

''இப்ப மணி எட்டாச்சு, புறப்படுங்க அங்கிள். இதுக்குள்ள எங்கேயும் போயிருக்க முடியாது. பிடிச்சுறலாம்.''

அடுத்த ஐந்து நிமிடத்தில் புறப்பட்டோம்.

கதவை நான் தட்டியவுடனே, உள்ளே கிசுகிசு பேச்சுக் குரல் ஒலிக்கத் 'தடக்'கென்று தாள் விலகியது.

ஒல்லியாக அரும்பு மீசையுடன் ஒருவன் எட்டிப்பார்த்தான்.

''யார் வேணும் உங்களுக்கு?''

அவனைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தேன்.

''மிஸ்டர், என்ன இது அனுமதி இல்லாமல் 'ப்ளீஸ் ஹெல்ப் யுவர் செல்ஃப்!''

''அவனை அனுப்பு!''

குரல் கேட்டு முன்னே வந்த பைரவி, கோபத்தோடு என்னைப் பார்த்தாள். எனக்குப் பின்னால் நின்ற தன் தகப்பனாரையும் பார்த்தாள்.

''பைரவி புறப்படு!''

''நோ.... டாடி. நாங்க இணைஞ்சிட்டோம். எங்களைப் பிரிக்க ஆண்டவனால் கூட இனிமேல் முடியாது.''

''சட்டத்தால முடியும். உனக்கு வயசு பதினேழுதான்.''

''நானு விரும்பி வந்திருக்கேன். இவரை விட்டு நான் வரமாட்டேன். குறுக்கே நின்னு அனாவசியமா எங்களைச் சாக அடிக்காதீங்க.''

மறுபடியும் ஷினிமா.

''ஸ்டாப் திஸ் நான்சென்ஸ். நாலு ஆட்களோட வந்திருக்கும். அவனை உன் கண் முன்னாலேயே அடிச்சுப் போட்டுட்டு உன்னை இழுத்துப் போக எங்களாலே முடியும்.''

''முடிஞ்சாச் செய்யுங்க. ஆனா ஒரு இருக்கும். என் பிணத்தைத்தான் இழுத்துப் போக வேண்டி வரும்.''

ஆவேசமாக அலறிய அவளைப் பார்க்க எனக்குத் 'திக்'கென்றது. திரும்பிப் பார்த்தேன். கண்ணீருடன் அங்கிள்.

''அங்கிள் இந்தச் சமயத்தில?''

''இதைத் தவிர வேறென்ன முடியும் ஆனந்த்? என்ன நெஞ்சழுத்தம் பாரு அவளுக்கு. உயிரைக் கொடுத்துக் கண்ணுக்குள்ள வச்சுப் பொத்திப் பொத்திக் காப்பாத்தி—வளர்த்த என் கண்ணம்மாவா ஆனந்த் இவ! பாசத்தைக் கொட்டின, என்னைவிட, புதிதான வேறு ஒருத்தன் பெரிசா ஆனந்த்? விட்டுருப்பா? இனிமே போராட எனக்குத் திராணி இல்லே.

''கடைசியாக் கேக்கறேன். நான் வேண்டாமா கண்ணம்மா உனக்கு?''

''இவரை நீங்க மறுத்தா நீங்க வேண்டாம்!''

''ஏன் பைரவி? உங்க அப்பாவே உனக்கு வேணும்னு அவர் உனக்குப் போட்ட அந்த முப்பது சவரன் மட்டும் எதுக்கு?''

''ஆனந்த், நமக்குப் பணமா பெரிசு?''

''நீங்க சும்மா இருங்க அங்கிள். கேட்டதுக்குப் பதில் சொல்லு. எதுக்கு அந்த நகை மட்டும்?''

சரசரவென்று கை வளையல்களையும் கழுத்துச் சங்கிலியையும் அவிழ்த்து எடுத்தாள். பெட்டியில் இருந்த மீதி நகையும் கைக்கு வர, என்னிடம் நீட்டினாள்.

''பைரவி என்ன இது? யார் இந்த ஆள்? நகை உன்னுது. எதுக்காகக் குடுக்கணும்?''

''நகை அவளுது. ஒப்புக்கறோம். ஆனா அவ அவளோட அப்பாவுக்குச் சொந்தம். இதை நீ ஒப்புக்கறியா?''



''போன், வடையைப் பெரிசாப் போடாட்டிப் பரவாயில்லே. துளையை யாவது பெரிசாப் போடாம இருக்கலாம்ல.'' —சிறை அ. கதிர்வேல்

''காதலைப் பணத்தோட இணைக்க வேண்டிய அவசியம் என்ன வந்தது?'' அவன் என்னைப் பார்த்துச் சீறினான்.

''உனக்கு வந்திருக்கே!''

''ஆனந்த்!'' பைரவி அலறினாள்.

''ஆத்திரப்படாதே பைரவி, கட்டின புடவையோட இவன் உன்னை மனைவியா ஏத்துப்பானு கேளு. அப்படின்னு நானே உங்க கல்யாணத்துக்குச் சாட்சியா இருக்கேன். கமான், கேட்டுச் சொல்லு.''

''ராம் என்ன இதெல்லாம்?''

''அவங்களை முதல்ல வெளியே அனுப்பு பைரவி.''

''முகத்துல அடிச்ச மாதிரி, எனக்கு என்னோட பைரவிதான் முக்கியம்னு சொல்லுங்க ராம். இந்த நகைகளை உங்க கையால அவங்க மூஞ்சில தூக்கி எறிங்க. இது ஆழமான காதல்னு நிரூபிச்சுக் காட்டி அவங்க முகத்துல கரியைப் பூசுங்க. கமான்!''

''......''

''உங்களுக்கு என்னைவிடப் பணம்தான் பெரிசா?''

''நீயும் எனக்கு வேணும் பைரவி!''

''அப்படின்னா....அப்படின்னா....?''

''அதான் சொல்லிட்டானே! நீயும்னு அந்த 'உம்'முக்கு அர்த்தம் நகை. என்ன பைரவி காதல் ரொம்ப ஆழமா?''

''ராம்... யூ....யூ... உன்னை நம்பி நான் எதையெல்லாம் குடுத்தேன். அதையெல்லாம் திருப்பிக் குடடா பாஸ்டர்ட்.'' சட்டையைப் பிடித்து அவள் குலுக்க, சரேலெனப் பைரவியை உதறிவிட்டு நடந்தான்.

''டாடி அவன் போறான் டாடி. என்னை ஏமாத்திட்டுப் போறான் டாடி...!'' பெரிதாக அவள் அழத் தொடங்க,

ஆதுரத்துடன் மகளை அணைத்துக்கொண்டார் அங்கிள். ''போகட்டும் விடு கண்ணம்மா. சரளி வரிசையிலேருந்து உனக்குச் சங்கீதம் நான் கத்துத் தர்றேன். இடையில வந்த கருதி பேதத்தை நினைக்க அழலாமா?'' கன்னத்தில் வழியும் கண்ணீரைத் துடைத்து மகளின் நெற்றியில் அவர் முத்தமிட்ட போது, எனக்குக் கண்கள் பனித்தன.

கருத்து: கார்ட்டூன்: உமாபதி




''என்னநாள்முழுக்கவிக்கிட்டு?...''
''அதைஏன் கேக்கறீங்க! செயற்கை மழைத் தண்ணி சாப்பிட்டேன். செயற்கையா இப்படி விடாம விக்கல்...!''



''எங்க தோட்டத்துப் பூ வெறும் வாசனைதான்! நம்ம தோட்டத்துப் பூ செயற்கை மழையிலே விளைஞ்சது! எல்லாம் காகிதப் பூவாகவே மலர்ந்திருக்கு!''



''இந்தக் காலத்திலே எல்லாமே தலைகீழா மாறிப் போச்சு...''
''ஆமாம் அந்தப் பக்கம் இயற்கை மழைத் துளிகளையும் இந்தப்பக்கம்செயற்கை மழைத் துளிகளையும் பார்த்தாலே தெரியுதே!''





''என்னபண்றது?... மழைமெஷினை விலைக் கொண்டு என் பங்களா ஓவர் ஹெட் டாங்கிலே செயற்கை மழை பெய்ய வெக்கறேன்!''



''இது என்னடி, புது இனுசு ஜல தோஷம் காதாலே நீர் வடியுது!''
''செயற்கை மழையிலே நனைஞ்சேன்! அதான் இப்படி!''

# ிப்பு மழை!



''என்ன இப்படி எல்லாரும் மயிலாப்பூர் பக்கம் ஓடறீங்க''

''.... வந்து.... மாம்பலத்திலே பெய்ய வேண்டிய செயற்கை மழை மயிலாப்பூரில பெய்யுதாம்!''





''மருந்து அதிகமா அடிச்சிட்டாங்க. அதான் இப்படி மேகம் பொத்துக்கிட்டுக் கொட்டுது!''



''என் ஜலதரங்கத்துக்கு செயற்கை மழைத் தண்ணி ஊத்தித்தான் வாசிக்க முடியும்!''



''என்ன மொட்டைத் தலையோ! இருந்த கட்டை ஜடா முடியா இப்படி?....''

''ஒண்ணுமில்லே! இந்தக் கட்டை செயற்கை மழையிலே நனைஞ்ச பலன்!''

# முக்கண்ணனுக்கு ஒரு அன்னை

ஆனந்தி



அறுபத்து மூவர் படிவங்கள் உள்ள சிவாலயங்களில் அடியார்களுக்கு எதிரே ''காட்சி தந்தார்'' என்ற பெயரோடு காளையின் மீது முழங் கையை ஊன்றிய கோலத்தில் சிவபெருமானைக் காணலாம். நாயன்மார்கள் அவரைச் சதா தரிசித்துக் கொண்டே இருப்பதாகஐதிகம்போதும். இவர்களில் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தாயாரான இசைஞானியார், பாண்டி மாதேவியான மங்கையர்க்கரசியார், தமிழ்ப் புலமை பெற்றவரான காரைக்காலம்மையார் மூவரும் இடம் பெற்றிருக்கின்றனர். அறுபத்தி இரண்டு நாயன்மார்களும் நின்றபடியேசனைத் தரிசித்துக் கொண்டிருக்கும்போது காரைக்காலம்மையார் மட்டும் அமர்ந்த நிலையிலேயேகண்டு களிக்கிறார். அப்படி கௌரவித்திருக்கிறார்கள் அவரை.



○ காரைக்காலில் அம்மையார் கோவில்

காரைக்காலம்மையார் என்று நினைத்தாலே நெஞ்சம் வியப்பினால் விம்முகிறது. நம்மைப் போலப் பெண்ணாய்ப் பிறந்து அபூர்வ அழகியாகத் திகழ்ந்தும், புலன்களால் இயங்கும் சரீரம் வேண்டாம் என்று பேய் உருவம் வேண்டிப் பெற்றவர். சிவ கணங்களோடு சேர்ந்திருந்து சதா ஆடல் வல்லானின் அடிக்கீழ் இருந்து திருக் கூத்தைக் கண்டு களித்துத் தாளம் போட்டு மகிழும் பேறு பெற்றவர். தன்னைக் காரைக்கால் பேய் என்று அழைத்துக் கொண்டவர். இப்படிப்பட்ட அதிசயப் பெண்மணியின் ஊரையாவது பார்க்க வேண்டும் என்று ஆர்வம் மேலிட்டது.

காரைக்காலம்மையாரோடு தொடர்புடைய தலங்கள் மூன்று. முதலாவது அவர் பிறந்து வளர்ந்து வாழ்க்கைப்பட்ட காரைக்கால். இரண்டாவது சிவபெருமான் வீற்றிருக்கும் புனித மலையைக் காலால் மிதிக்கக் கூடாது என்ற உறுதியுடன் அவர் தலையால் நடந்து சென்ற கைலாயம். மூன்றாவது அவர் தவம் செய்து ஆடல் வல்லானுடைய ஊர்த்வ தாண்டவக் கோலத்தைக் கண்டு களித்த திருவாலங்காடு.



○ திருவாலங்காடு - ஆடிநிற்கும் காளி.

திருக்கைலாயம் தற்போது சீனாவின் எல்லைக்குள் இருப்பதாக அறிகிறோம். மேலும் பிராண வாயு குறைவாக உள்ள அந்த உயரத்தில் குளிரையும் பனியையும்பொறுத்துக்கொண்டு இமயமலையின் உச்சியில் ஏறுவதற்கு அம்மையாரைப் போல சிவகண வடிவம் பெற முடியுமா நமக்கு? நாகைக்கு அருகில் உள்ள காரைக்கால் நகரத்தையும் அரக்கோணத்துக்கு அருகில் உள்ள திருவாலங்காட்டையும் தரிசிப்பதில் சிரமம் அதிகமில்லை.

காரைக்கால் நகரத்தின் முக்கிய வீதியிலேயே இருக்கிறது அம்மையாரின் திருக்கோயில். இந்தக் கோயில் கட்டப்பட்டு அறுநூறு ஆண்டுகள் ஆகியிருக்கலாம் என்றார் குருக்கள். புகமூடம்புகையித் தெய்வடிவம் பெற்று விளங்கும் அம்மையின் திரு உருவத்தைக் காணும் போது மனம் நெகிழ்ச்சியடைகிறது. அன்னபூரணியைப் போலக் கையில் பாத்திரமும் கரண்டியும் ஏந்தியிருக்கிறார். சிவனடியாருக்கு அமுது அளித்துப்பசி தீர்த்தவர் ஆயிற்றே. தலையில் சொருக்குக் கொண்டையுடன் மானிட வடிவத்தில் இவரை இங்கே காண்கிறோம். தீபாராதனை செய்து குங்குமப் பிரசாதம் அளிக்கும் போது, இவர் செய்த அற்புதங்கள் நினைவுக்கு வருகின்றன. கோயிலின் கருவறையைச் சுற்றி அவருடைய வரலாறு சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருக்கிறது. இங்கேயே சிவன் கோயில் ஒன்றும் இருக்கிறது. சந்திரன் பூஜித்த தலம். ஸோமநாதர் ஸோம நாயகி இருவரும் குடி கொண்டிருக்கிறார்கள்.

மாங்கனி கொடுக்கும் உற்சவம் நடக்கும்போது வரலாற்றில் வரும் சம்பவங்களை நடத்திக் காட்டுவார்களாம். புனிதவதியார் என்ற அம்மை யாருடைய கதை எல்லாருக்கும் தெரியும்.

இவர் வேண்டிய உடனே மாங்கனி கிடைத்த அற்புதத்தைக் கண்ட புனிதவதியாரின் கணவனை பரமதத்தன் இவரைத் தன் குலதெய்வமாகவே வணங்கி விட்டான். அந்த அதிர்ச்சி அம்மையாருக்கு நன்மையாகவே முடிந்தது.

பேய் வடிவத்தோடு கைலாயத்துக்கே புறப்பட்டு விட்டார். தலையால் நடந்து ஒரு பேய் வருவதைக் கண்ட உமையவள் சிரித்து விட்டாள். அடியார்களைப் பரிகசித்தால் ஈசன் பொறுப்பாரா? ''அம்மையேவருக'' என்று வாயார அழைத்தார். அன்று முதல் உலகனைத்துக்குமே தாயாக விளங்கி வருகிறார்.

குழந்தை ஆடிக் களிப்பதை அருகில் இருந்து பார்த்து மகிழும் தாயைப் போலவே ''நீ ஆடும்போது உன் அடிக் கீழிருந்து பாடி மகிழ வேண்டும்'' என்று வரம் கேட்டார் அம்மையார். சிவபெருமானும் திருவாலங்காட்டில் தரிசனம் கொடுப்பதாக வரமளித்தார்.

• • •

ஆல மரம் என்ன புண்ணியம் செய்ததோ? ஸனகாதி முனிவர்களுக்கு உபதேசம் செய்ய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாகச் சிவபெருமான் விளங்கியது ஆல மரத்தடியில். கண்ண பெருமானோ பிரளய காலத்தில் ஆலிலை மீது மிதக்கிறான்.

இவ்வளவு புண்ணியம் செய்த ஆல மரங்கள் நிறைந்த காட்டைத் தான் ஆடுவதற்கும் தேர்ந்தெடுத்தார் நடராஜப் பெருமான். ஓங்கிவளர்ந்து பெரியவிழுதுகளைத் தூண்களாக நட்டு, கிளைகளால் கூரைவேய்ந்த ஆல மரக் காடு இயற்கையழகோடு விளங்கும் அரங்கமாகத் திகழ்ந் திருக்கவேண்டும். இந்த ஆல் அரங்கத்தில் மூன்று பக்தர்களுக்கும் பிரம்மாதி தேவர்



அண்டமுற நின்றருளிய நாயனார் திருவாலங்காடு.



காரைக்கால் அம்மையார்-திருவாலங்காடு.

களுக்கும் நடனக் கோலத்தைக் காட்டி அருளினார் கூத்த பிரான்.

சுநந்த முனிவரின் ஆசை இங்கே நிறைவேறியது. சிவ தாண்டவத்தைப் பார்க்க விரும்பித் தவம் இயற்றிய போது அவர் மீது மண் மேடிட்டுத் தலையில் முஞ்சம் புல் முளைத்து விட்டது. ஆகையால் முஞ்சிகேச முனிவர் என்ற பெயர் பெற்றார். இவருக்கு ஆலங் காட்டில் தனிக் கோயில் இருக்கிறது.

கார்க்கோடகனைக் கங்கணமாக அணிந்திருந்தார் ஈசன். ஒரு நாள் விஷத்தைச் சிந்திய கார்க்கோடகனைப் பூவுலகம் சென்று தவம் செய்யச் சொல்லி அனுப்பிவிட்டார் ஈசன். ஆலங்காட்டிலுள்ள மடுவில் தவமியற்றிய கார்க்கோடக முனிவரும் தாண்டவ தரிசனம் பெற்றார்.

காளிதேவியின் செருக்கையடக்க உயரே தூக்கிய திருவடியுடன் ஆடியதால் காளி தேவி ஆட முடியாமல் தோற்றுப் போனதாகவும் ஒரு கதை வழங்குகிறது.

இந்த வரலாற்றை வைத்துத் திருவாலங் காட்டில் விக்ரகங்களைச் செய்துவைத்தார்களோ அல்லது இந்த அற்புத விக்கிரகங்களைவைத்துக் கதைகள் எழுந்தனவோ தெரியவில்லை. இங்கே கோயில் கொண்டுள்ள எண்தோள் ஈசரான ஊர்த்வ தாண்டவ மூர்த்தியையும் ஆயத மண்டலத்தில் ஆடத் தயாராக இருக்கும் காளி தேவியின் சௌந்தரிய வடிவத்தையும் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்.

பார்க்கப் பார்க்கத்
திகட்டுமோ உந்தன்
பாத தரிசனம்

என்று வானை நோக்கித் தூக்கியுள்ள பாத கமலத்தையும் எட்டுக் கரங்களை விரியுள்ளபாங்கையும் பார்க்கும்போது பாடத்தோன்றுகிறது.

காளி தேவியும் 'நான் என்ன சளைத்தவளா?'என்று கேட்பது போலத் தலையை நிமிர்த்தித் தலை மயிர் சிலும்ப எட்டுக் கரங்களிலும் ஆயுதங்கள் தாங்கியிருக்கிறாள்.

தெய்வ வடிவங்களுக்கு நான்கு கரங்களும் எட்டுக் கரங்களும் வைத்து உருவங் கொடுப்பது எல்லாத் திக்குகளிலும் பரவி யிருப்பதைக் குறிப்பதற்காகவே.

''காடும் கடலும் மலையும்
மண்ணும்
விண்ணுஞ் சுழல அனல்
கையேந்தி
ஆடும் அரவப் புயங்கன்
எங்கள்
அப்பன் இடம் திரு
ஆலங்காடே''

என்று எட்டுத் திசைகளும் கிடுகிடுங்க, அண்டமதிர விண்ணனில் நிறைந்துள்ள கோளங்களின் சுழற்சியாகவே விளங்கும் ஈசனின் ஆடலை வர்ணிக்கிறார் அம்மையார்.

ஆலங்காட்டில் ஈசன் ஆடிய இடத்தில் அவருக்கு ஒரு இரத்தின சபை இருக்கிறது. ஐந்து சபைகளில் இதற்கு முதலிடம் தரப்பட்டிருக்கிறது. ''மாயன் ஆட மலையான் மகளும் மருண்டு நோக்குமே''என்ற வரிகளுக்கு இயைந்தபடி வியப்பைக் காட்டும் கரத்தோடு நிற்கிறாள் சிவகாமி அம்மை. மலர் ஏந்தும் கரம் டோலா ஹஸ்தமாகக் காணப்படுகிறது. வலது புறத்தில் காரைக்கால் அம்மையின் மெலிந்த உருவம். கையில் தாளம், முகத்தில் பரவசம்.

ஏழு கிளைகள் கொண்ட தீபக்காலில் கற்பூரத்தை வைத்து ஒவ்வொரு சடராகக் குருக்கள் ஏற்றும் போது சிறிது சிறிதாக ஒளி கூடுவதால் தாண்டவமூர்த்தியின் வடிவம் பிரகாசமடைந்து வருகிறது. இது ஏதோஇந்திரஜாலம்போலத் தோன்றுகிறது. கற்பூரத்தில் பிழம்பு இருமுக மண்டலத்தை, அதில் உள்ள பாவத்தை நன்றாகப் புலப்படுத்தி ஒளிர்கிறது. அனலை வைத்துக் கொண்டு விளையாடும் பெருமான். நெற்றியில் தீ. கையில் தீ. செழுந்தீ வண்ணன். ஆடுமிடம் தீ எரியும் சுடுகாடு. திருவாசியில் உள்ள சுடர்கள் எல்லாம் மேல் நோக்கிக் கொழுந்து விட்டெரிவது போல் அமைந்த சிற்பியின் திறத்தை வியக்கிறோம். என்ன கலை நுணுக்கம்!

காரைக்கால்அம்மையார் பாடிய பதிகங்களுக்கு மூத்த திருப்பதிகம் என்று பெயர். மூவர் தமிழ்ப் பாடல்களுக்கு முன்னோடியாக இருந்தவர். அது மட்டுமா? அம்மையாரின் அற்புதத் திருவந்தாதியே முதன் முதலில் பாடப் பெற்றது என்றும், அவரைப் பின்பற்றியே மற்ற அந்தாதிகள் எழுந்தன என்றும் கருத்து நிலவுகிறது.

முத்தும் பவழமும் கோத்தது போல இரண்டு வித பாக்களால் ஈசனுக்கு இரட்டை மணி மாலை அணிவித்தவரும் இவரே.

''நடுத் தெருவிலே சண்டை போடறீங்களே, அசிங்கமா யில்லே?''
''இதுக்காக எலக்ஷன்லே நின்னு சட்ட சபைக்கா போக முடியும்?''
—கிணத்துக்கடவு ரவி



பாடலின் பலனைச் சொல்லும் திருக்கடைக் காப்பு பாடியவரின் பெயரைக் கூறுதல் முதலிய மரபுகளையும் இவரே தொடங்கி வைத்தார். இவருடைய புகழ் கடல் கடந்து பரவியிருப்பதை எண்ணி எண்ணி நாம் பெருமைப் படலாம். சேக்கிழாரும், நம்பியாண்டார் நம்பியும் போற்றிய புண்ணியவதி புனிதவதியார்.

கோவில் மதிலின் உயரத்தைப் பார்த்தால் கோட்டைச் சுவர் மாதிரி இருக்கிறது. குட முழுக்கு விழாவுக்காகச் சுறுசுறுப்பாகத் தொண்டர்கள் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். கோபுரம் மஞ்சள் நிறத்தோடு புதுப் பொலிவு பெற்று நிற்கிறது.

திருவாலங்காட்டில் உருவமாகவும் அருவமாகவும் விளங்கும் ஈசுவரனுக்குத் ''தேவர் சிங்கப்பெருமான்'' என்று பெயர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ''தேவர் சிங்கமே!'' என்று அழைத்துப் பாடுகிறார்.

அம்மன்கோவிலில் சிங்கம் தாங்கும் தூண்கள் இருக்கின்றன. அதனால் பல்லவர் திருப்பணி என்கிறார்கள். தேவி வண்டார் குழலியம்மை. கோபுர வேலை நடந்து கொண்டிருந்தபடியால் பள்ளியறையில் வைக்கப்பட்டுள்ள சிறிய அம்மனுக்கே அர்ச்சனை செய்து பிரஸாதம் வழங்கினார் குருக்கள்.

கல் வெட்டுக்களாலும் புகழ் பெற்றது இந்த ஊர். நந்திவர்ம பல்லவன் காலத்துச் சாஸனம்இருக்கிறதாம். அந்தக் காலத்தில் செங்கல் திருப்பணியாக இருந்திருக்கிறது. சோழ சாம்ராஜ்யம் உன்னத நிலையில் இருந்த ராஜேந்திர சோழன் காலத்தில் இந்தக் கோவில் கற்றளியாகக் கட்டப் பட்டது. நடராஜ மூர்த்தியின் கோவில் விக்கிரம சோழன் காலத்தில் கட்டப் பட்டது என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

காரைக்கால் அம்மையாரிடம் பெரு மதிப்புக் கொண்ட ராஜேந்திரசோழ சக்கரவர்த்தி காலத்தில் நடராஜ மூர்த்தியின் திருவடிக் கீழ் காரைக்கால் அம்மையாரை வைப்பது வழக்கத்துக்குவந்தது. சோழர்கள் ஈழ நாட்டில் பெற்ற வெற்றியால் இந்து சமயம் அங்கெல்லாம் பரவியபோது அம்மையாரின் புகழும் பரவிற்று. ''அறவா நீ ஆடும் போது உன் அடியின் கீழ் இருக்க'' வேண்டும் என்று தான் கேட்ட வரம் இவ்வளவு உன்னதமான முறையில் நிறைவேறும் என்று அவரே எதிர் பார்த்திருக்க மாட்டார்.

கம்போடியாவிலும் ஸ்ரீவிஜய நாட்டிலும் 9ஆம் நூற்றாண்டில் சோழர்கள் எழுப்பியபோது நடராஜ மூர்த்தியின் தாளுக்கருகில் கையில்தாளத்தோடுகாரைக் காலம்மையார் அமர்ந்திருப்பதைக் காணலாம். ராஜேந்திர சோழன் காலத்துக்கு முன்பே அம்மையாரின்புகழ் பரவி விட்டதாகக் காண்கிறது.

திருவாலங்காட்டு செப்பேடுகள் மிகவும் பிரசித்தி பெற்றவை. கோவில் பிராகாரங்களில் கல் வெட்டுக்களைப் பார்க்கிறோம். ஆனால் படிக்கத்தான் தெரியவில்லை. இந்த ஊரில் புதைந்திருந்து 5000 ஆண்டுகளுக்குப்பிறகு கிடைத்த மண் தாழிகளும் பிரசித்தி பெற்றவை.

ரொம்ப உவகையளித்த விஷயம் ஒன்று. கண்ணுக் கெட்டிய தூரம் தென்னையோ பனையோ காணப் படவில்லை. (ஆல மரமும் சோலையில் ஒன்றும் பனந்நிலையத்துக்கருகில் ஒன்று தான் இருக்கின்றன.) சோழப் பேரரசர் காலத்தில் பழைய னூர் திருவாலங்காட்டில் தென்னை மரத்திலும் பனை மரத்திலும் ஈழவர் ஏறக் கூடாது என்ற சட்டம்இருந்தது. இந்த தலத்தில் மக்கள் மது அருந்தக் கூடாது என்பதால் மரமேறுவதற்கே தடைவிதிக்கப்பட்டிருந்தது. மதுவிலக்கைத் தமிழ் நாட்டில் அப்போதோ அமுலுக்குக் கொண்டுவந்துவிட்டார்கள்.

ஹரி, ப்ரும்மா, சந்திரன் இவர்கள் வழிபட்ட தலமாதலால் நவக்கிரஹம் கிடையாது.

''வீடு நமக்குத் திருவாலங்காடு'' என்று பாடிய பட்டினத்தார் நமக்கு ஈடு சொல்ல யாருமே இல்லையென்று பெருமிதத்துடன் கூறுகிறார்.

திருவாலங்காடு சென்று எல்லைக் காளியையும் அண்டமுற நின்றருளிய நாயனாரையும், அற்புதத் திருவந்தாதி பாடிய அம்மையாரையும் ஆடல் உகந்த முனிவர்களையும் தரிசித்து விட்டால் நமக்கீடு சொல்ல ஒருவரும் இல்லை என்று பெருமிதம் அடையலாம்.

காளி ஆடக் கனல் உமிழ் கண்ணுதல்
மீளி ஆடுதல் பாருமே!
மீளி ஆடல் வியந்தவள் தோற்றெனக்
கூளி பாடிக் குனிப்பதும் பாருமே!

—குமரகுருபரர்

மீளி — தலைவன்; கூளி— சிவ கணம்.



''நங்க காரை இவ்வளவு விலை சொல்றீங்களே, கொஞ்சம் தள்ளிக் கொடுங்க.''
''அதெல்லாம் என்னால தள்ள முடியாது. நீங்கதான் ஆள் வச்சுத் தள்ளிக்கணும்.''

—ஈழை அ. கதிர்வேல்

உ

அருள்மிகு புவனேஸ்வரி துணை

## அன்பு வேண்டுகோள்

ஈஸ்வர கிருபையை முன்னிட்டும், ஜகத்குரு காஞ்சி, சிருங்கேரி மஹா சந்நிதானங்கள் அநுக்கிரஹத்தை முன்னிட்டும், ஸ்ரீ ஸ்ரீ சாந்தானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஆசியுடனும் சென்னை, கே. கே. நகர், நவபாரத் காலனி வளாகத்தில் அருள்மிகு புவனேஸ்வரி அம்மனுக்கு ஓர் தனி ஆலயம் எழுப்ப முடிவு செய்து, அதற்காக காலனி மக்கள் ஒருங்கிணைந்து செயல்பட்டு வருகிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது முதுரை. சென்னை கே. கே. நகர் நவபாரத் காலனியிலும் ஒரு திருக்கோயில் உருவாக்குவது எங்களது தெய்வீகக் கடமை. ஆலயத்தில் விநாயகர், வள்ளி தெய்வயானை சமேத முருகர், ஆஞ்சநேயர், நவக்கிரஹங்களையும் பிரதிஷ்டை செயய எற்பாடாகி வருகிறது. நிலக்கிரயம் உட்பட ஆலயம் நிர்மாணிக்க சுமார் 3 லட்சங்கள் தேவைப்படுகிறது.

தெய்வ அனுக்கிரஹத்தோடும் கேட்டதையெல்லாம் இல்லை என்னாது அளிக்கும் பக்த கோடிகள் மீது நாங்கள் வைத்துள்ள அசையாத நம்பிக்கையாலும், தெய்வ கைங்கர்யத்துக்கு தங்களாலியன்ற அளவில் நிதிஉதவி அளிப்பீர்கள் என்ற முழு நம்பிக்கையாலும் இந்தப்பணியில் இறங்கி உள்ளோம். நவபாரத் காலனியில் உருவாக்கப்படும் ஆலயப் பணிக்கு பேருதவி நல்கிட வேண்டுகிறோம். அருள்மிகு புவனேஸ்வரி தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினருக்கும் சகல சௌபாக்யங்களும் அளிக்க, அவளுடைய திருப்பாதங்களை இறைஞ்சுகிறோம்.

தெய்வப் பணியில் என்றும் தங்கள்

அருள்மிகு புவனேஸ்வரி திருக்கோயில் கமிட்டி.

மணியார்டர், காசோலை அனுப்பும் அன்பர்கள் அருபமிகு புவனேஸ்வரி திருக்கோயில் கமிட்டி, என்ற பெயரில் L 12J. நவபாரத் காலனி, கே. கே. நகர், சென்னை—600078 என்ற விலாசத்துக்கு அனுப்பவும்

வி—ம்

# புயலில் சிக்கிய புல்

## கோமகள்

சீனு போண்டாக்களை வாணலியிலிருந்து ஜாரணியால் வடிகட்டித் தட்டில் போட்டார். தயாராக நின்றிருந்த நான்கு சர்வர்களும் தத்தமது பகுதியில் சாப்பிடுபவர்களுக்காக அவற்றைத் தட்டில் அடுக்கி எடுத்துச் சென்றார்கள்.

சாமனி இட்லிகளை எடுத்து அடுக்குவாள். பூரி இட்டுத் தருவாள். இடையே வடை மாவு, போண்டா மாவு அரைப்பாள். மீண்டும் சட்னி தயார் பண்ணுவாள். அவள் தம்பியும் கூடமாட உதவுவான்.

இதுவரை இந்த வேலைக்கு வந்தவர்கள் இவளைப் போல் ஒரு வருஷத்திற்கு மேல் நீடித்ததில்லை. இவள் ஒரு முணு முணுப்புக் கூட இல்லாமல் தெய்வமே என்று ஒன்று மாற்றி ஒரு வேலையைச் செய்து கொண்டே இருக்கிறாள்.

அவள் அப்பா, அம்மா போனதிலிருந்து இந்த வேலைதான் அவளுக்கும் அவள் தம்பிக்கும் சோறு போட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் பாதுகாப்பு?

சீனுவைப் போல் ஒரு வயதான மனிதர் இருக்கக் கொண்டு, அவளுக்கு ஓர் ஆதரவும் இரக்கமும் கிட்டின. இல்லாவிட்டால் பதினைந்து வயசின் வாசற்படியில் நிற்கும் அவளது இளமை கிழிந்த உடையை லட்சியம் பண்ணாமல், ஏழைமை நிலையை எண்ணிப் பார்க்காமல், பசி பட்டினியையும் மீறி, இந்த அழகுக் கோலத்தில் பிறரை ஈர்க்குமா?

அவர்: என்ன அந்தக் காய்கறிக் கடையிலே ஒரே கூட்டமா இருக்கு. ஏதாவது காயோட விலை குறைஞ்சிருக்கா?

இவர்: ஊஹூம்! காய்கறியோட விலையைக் கேட்ட ஒருவர் மயக்கமாயிட்டாராம். அதுக்குத்தான் அவ்வளவு கூட்டம்!

—எஸ். வேங்கடராமன்



சீனுவுக்குத் தன் மகள் நாகத்தின் நினைவு வந்தது. நெருப்பாக இருந்த அவளிடம் எத்தனை பேர் வாலாட்டினார்கள். கடைசியில் ஒருவனிடம் அவள் செருப்பைக் காட்டப் போய் அவனைச் சூறையாடிவிட்டு ஆற்றில் விழும்படி செய்துவிட்டானே ஒரு படுபாவி...

இதோ இந்தச் சின்னஞ் சிறிசு... சர்வர்களின் சில்மிஷங்களுக்கும், கேலிப் பேச்சுக்களுக்கும் ஈடு கொடுத்துக் கொண்டு அடங்கிப் போகும் இவள் கதி?

சிறிது நாளாகவே அவள் புடவை ரொம்பவும் நைந்து கண்டவிடத்திலும் ஓட்டையாகி விட்டிருப்பது தெரிந்தது. சீனுவுக்கு மனத்தில் கழிவிரக்கம் பொங்கியது. இவளுக்குத் தன்னால் என்ன செய்ய முடியும்? தன் குடும்பத்தில் ஆறு பேருக்குச் சோறிட வேண்டியவராயிற்றே அவர். வெறும் இரக்கத்தைத் தான் அவர் கொடையாகத் தர முடியும்.

''சட்னி ஆச்சா?'' ஒரு சர்வர் சாமனியின் கல்லாறுக்குப் போகிறான்.

''உப்பிருக்கா பாருண்ணா!'' சாமனியின் குரல்.

''உங்கிட்டத் துப்பு இருந்தால்தானே, சட்னியில் உப்பிருக்கும். எம் பொண்ணே! நான் பேசறது புரியலையா?''

''புரியலே அண்ணா!'' பரிதாபமாகப் பார்த்தாள்.

''சட்! நீ என்ன அண்ணா அண்ணான்னு கூப்பிடறே? நீயென்ன,என் கூட வா பிறந்தே?''

இதற்கு மேல் சீனுவால் தாங்க முடியவில்லை. ''டேய் பாலு! அங்கே என்னடா பேச்சு? போய் டேபிளைக் கவனி...''

''ஒழும் போண்டா கூடறதா, நான் பேசறதைக் கேட்கிறதான்னே புரியலே.'' முணு முணுத்தான் சர்வர் பாலு.

இவன் பரவாயில்லை.

''உம்! உனக்குப் பதினைஞ்சு வயசா? இருபது வயசு வளர்த்தியாயில்லே இருக்கு மேனி!'' என்று மயங்குவான் இன்னொருத்தன்.

அவன் பேச்சின் பொருள் அவளுக்கு விளங்காது. முகம் கவிழ்ந்து கொண்டு தன் வேலையில் மூழ்கி விடுவாள். நல்ல வேளை. சிரிப்பு என்ற ஒன்றை அவளிடம் காண முடியாது. அதுதான் அவளைக் காப்பாற்றும் அரண் போலும் என்று சீனு நினைத்துக் கொள்வார்.

''என்ன சாமனி! ஒரு மாதிரி இருக்கே?''

''உடம்பு சரியில்லே மாமா! ஜுரம் வரும் போல் இருக்கு.''

''நீ வீட்டுக்குப் போய் ஓய்வு எடுத்துக் கோயேன். நாளைக்கு வரலாம்.''

''அதெப்படி மாமா முடியும்? ராச் சாப்பாட்டுக்குக் கூட வழியில்லாமல் தவிக்கிறோம். வேலையில்லேன்னா கூலி ஏது மாமா?''

''நான் வேணா முதலாளிகிட்ட சொல்லி..''

சீனுவுக்கு முதலாளியிடம் ஒரு மரியாதை இருந்ததைப் போல், முதலாளிக்கும் சீனுவின் மேல் ஒரு மதிப்பு உண்டு. அவர் சாமனியை வீட்டுக்குப் போக அனுமதித்தார். சாமனி

தன் தம்பி ரெங்கனை விட்டு விட்டுத் தனியாகப் புறப்பட்டாள்.

வீடு என்ற பெயரில் அந்த பங்களா வீட்டுத் தோட்டத்தின் கடைக் கோடியில், நாய்க்குக் கட்டப்பட்டிருந்த அழகான 'கென்னெ'லின் சுவர் சார்பில் ஒரு சின்ன ஆஸ்பெஸ்டாஸ் ஷீட் வேய்ந்த இடம். இதற்கு வாடகையாகப் பங்களா வீட்டில் அவள் ஒவ்வொரு இரவும் சமைத்து வைக்க வேண்டும்.

தன் பக்கத்து வீட்டுப் பெண் என்ற முறையில் கென்னலுள் இருந்த நாய் அவளைச் சிறு குரைப்புக் குரைத்து வரவேற்றது.

''டாமி!'' என்றவாறே கதவு அடி வழியாக அவள், அதன் தலையைத் தடவி விட்டுத் தன்னிடத்தில் ஒரு மூலையில் சுருண்டாள்.

**"அ**க்கா! உடம்பு சுடறதே...'' வேலையை முடித்துவிட்டு வந்த ரெங்கனின் குரலில் பதற்றம் தெரிந்தது.



''தம்பி! தம்பி! தலைவலி தாங்கலேடா! பங்களாவிலே போய்ச் சமைக்க வர முடியலேன்னு சொல்லிட்டு வாடா!''

''சரிக்கா!'' என்று ஓடிய ரங்கன் உடனே ஒரு மாத்திரையுடன் வந்தான். அதை அவள் வாயில் போட்டுத் தண்ணீரை ஊற்றினான்.

மூன்று தினங்களாயிற்று அவள் எழுந்து நடமாட. அப்படியும் உடம்பெல்லாம் முறுக்கிப் பிழியும் வலி. ஆனாலும் என்ன? அவள்

வேலைக்குப் போகாததினால் ஏற்பட்டிருந்த ஒரு நிலைமையை அவளால் சகிக்கக் கூடாத தாக இருந்தது.

''அக்கா! இன்னிக்கு ஒரு நாள் வீட்டி லேயே இரு. நாளையிலிருந்து வரலாம்...'' என்று பெரிய மனுஷத் தோரணையில் அவ ளைத் தடுத்துவிட்டுப் புறப்பட்டான் ரெங்கன்.

அவன் புறப்பட்டதும் சாமனி பங்களா வுக்குப் புறப்பட்டுச் சென்று, அம்மாளிடம் தன் ஜுரம் பற்றிக் கூறிவிட்டு, நாளையி லிருந்து இரவு சமையல் செய்ய வருவதாகக் கூறிவிட்டு, அந்த அம்மாள் தந்த டிகிரி காப்பியைக் குடித்த தெம்போடு தன் இருப்பிடம் வந்தாள்.

வரும்போதே 'திக்'கென்றது.

அவள் குடிசையோரம் சர்வர் சந்துரு நின்றிருந்தான். அவன் கண்களில் கபடம் ஒளிந்திருப்பதை உணர்ந்தாள் அவள்.

''ஹிஹி!'' என்று சிரித்துவிட்டு ''உடம்பு தேவலையா சாமனி! வந்து பார்க்கணும்னு தோணிச்சு சாமனி!... நான் புறப்படறேன்'' என்று ஒரு காகிதப் பொட்டலத்தைத் தந்து விட்டு விடுவிடுவென்று சென்றுவிட்டான்.

அதனுள் ஒரு புடவை இருந்தது. அவள் மனத்தின் மான உணர்ச்சி புண்பட்டது. இதை ஏன் இவன் எடுத்து வந்தான்? அவ னுள்ளிருந்த காகிதத்தில் ''என் அன்பு சாம னிக்கு அன்பன் சந்துரு''என்ற வாசகங்கள். அருவருப்பில் தூரத் தள்ளினாள்.

''இவன் கிட்ட ஜாக்கிரதையா இரு! அதிகம் பேச்சு வைத்துக் கொள்ளாதே'' என்று சீனு மாமா கூறியதன் பொருள் விளங்குவது போல் இருந்தது.

அவள் நினைவுகள் அறுவது போல் யாரோ வரும் ஒலி கேட்டது. நிமிர்ந்தாள். சர்வர் பாலு... இவன் எங்கு வந்தான்!

''சாமனி! உடம்பு சரியாயிட்டதா? உன் னைப் பார்க்காம இருக்கவே முடியலே... நான் சொல்றது புரியறதா சாமனி! இந்த ஓட்டல் வேலையிலே நீ என்ன பணம் சேர்க் கப் போறே, என்ன முன்னேறப் போறே! பேசாம நான் சொல்றபடி கேட்டால்... அதைப் பத்தி அப்புறம் பேசலாம்.. இதை வச்சுக்கோ...'' ஒரு துணிப் பையைத் தந்து விட்டு அவன் சென்றான்.

அதனுள் பிளவுஸ் பீஸ், பிரா, வளையல்கள் பவுடர் டப்பா... அருவருப்பில் அவற்றைத் தொடவே கூசினாள் அவள்.

அந்த ஓட்டலில் ஒரு குறுகிய வட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்தபோது, பார்த் துப் பேசிப் பழகப்பட்டிருந்தும், இந்த ஆண்மக்கள் அவளை வேறு கண்ணுடன்தான் பார்த்திருக்கிறார்கள் என்ற எண்ணம் உடம் பைக் கூசச் செய்தது.

தன் நிராதரவான நிலையை எண்ணி வேத னைப்பட்டாள் அவள்.

அடுத்த நாள், இருக்கும் ஒரே ஆதரவை யும் இழக்க நேர்ந்தாள் அவள்.

இரவு பங்களாவுக்குச் சமைக்கச் சென்ற போது அந்த வீட்டம்மாவும், அவள் கண வரும், எங்கோ சென்றிருந்தனர். என்ன சமைக்க வேண்டும் என்பதை ஒரு காகி தத்தில் எழுதிவிட்டுப் போயிருந்தாள் அம் மாள்.

உடல் அசதி முற்றும் தீராத நிலையில் மெதுவாகச் சமைத்துக் கொண்டிருந்தாள் அவள். எல்லா வேலைகளையும் முடித்துவிட்டு அவள் புறப்படத்தயாரானபோது, கோபா லன் – அந்த வீட்டின் மூத்த மகன் திரும்பி வந்தான். ஆனாலும் சாப்பாடு போடும் வேலையை அவள் செய்வதில்லையாதலால் தன்பாட்டில் புறப்பட்டாள்.

தன்னை யாரோ பார்ப்பதைப் போலிருக் கவே சட்டெனத் திரும்பியவள் ஒளிந்து கொண்டாள்.

''ஒரே தலைவலி,ஸ்ட்ராங்கா ஒரு கப்காப்பி போட்டு மேலே எடுத்து வர முடியுமா?'' கோபாலன் கேட்டான்.

மாட்டேன் என்று சொல்ல முடியுமா? காப்பியைத் தயாரித்துக் கொண்டு மேலே சென்றாள். உடை மாற்றிக் கொண்டு படுத்த வாறே ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட் டியவன், இவளைக் கண்டதும் ''வா சாமனி!'' என்றான்.

அவள் சுற்று முற்றும் டீபாய்க்குத் தேடிய போது ''என்னிடம் கொண்டு வந்து கொடு சாமனி!'' என்று சிரித்தான்.

காப்பி கப்பைப் பற்றும்போது அவன் கையையும் சேர்த்துப் பற்றவே... கப் கீழே விழுந்து சிதறியது.

''என்ன?... என்ன நடந்து விட்டது? ஓட்டல்லே வேலை செய்யறவன்கள்னு பரவா யில்லே, இல்லையா?... எங்கிட்டே மட்டும் பயப்பட என்ன இருக்கு?''

''தயவு செய்து அப்படியெல்லாம் பழி போடாதீங்க... நான் ஏழை!'' அழுகை குமுற விம்மினாள்.

''நீ ஏழைங்கறது தெரியுது. ஆனா தோட் டக்காரன், அம்மா கிட்டச் சொல்லிட்டிருந் தானே? உன்னைப் பார்க்க யாரெல்லாமோ வந்தானாமே... ஹி! ஹி! வா சாமனி!''

தகப்பன்: ஏன்டா சைபர் வாங்கிக் கிட்டு வந்து காண்பிச்சுட்டுப் பெரு மையாச் சிரிக்கிறியே!

பையன்: நல்லா பாருப்பா! எல்லா ருக்கும் போடற மாதிரி சின்ன சைபராப் போடாமல் பெரிய சைப ராப் போட்டிருக்காரே வாத்தியார்!

—'ஈரோடு மாரிமுத்து'



அவன் பிடியில் உடல் பதறி உள்ளம் அதிர்ந்தது. அவள் கைகள் அவன் முகத்திலும் மூக்கிலும் சரமாரியாகக் குத்துக்களை விட்டன. அவன் சற்று அயர்ந்திருந்த நேரத்தில் தப்பிக் கீழே ஓடி வந்தாள்.

அதே நேரம் கோபாலனின் அப்பாவும் அம்மாவும் வரவேற்பிலுடன் நின்றாள் சாமனி.

''என்னடி, மாடியிலிருந்து வரே... வெளியாட்கள் உன் குடிசைக்கு வரவு போதாமல் நீயே இங்கு வந்துட்டியா? போடி வெளியே!'' சீறினாள் அம்மாள்.

''அம்மா! உங்கள் பிள்ளைதான் என்னை''

''அவன் கூப்பிட்டா நீ போயிடறதா? சீ! சீ! நாளைக்குக்காலையிலேகுடிசையை விட்டுக் கிளம்பிடு....''

சீ! பாலு, சந்துரு மாதிரி கோபாலனும் கல்யாணமானவன். அவன் மனைவி இளி பேர்க்கு அத்தனை அழகு. இரண்டாவது பிரசவத்துக்கு ஊருக்குப் போயிருக்கிறாள். மணமான இந்த ஆண்கள் ஒரு புலியின் மன நிறைவோடும், பெருமிதத்தோடும் வாழாமல் புல்லைத் தின்ன ஓடி வருகிறதுகளே...!

ரெங்கன் அழுகையோடு கூறினான். ''இப்பொழுதே கிளம்பி சீனு மாமா வீட்டுக்குப் போய்விட்டால் ஏதாவது ஒரு வழி சொல்லுவார்....''

சாமனியும் ரெங்கனும் பொடி நடையாகவே நடந்து சீனு மாமா வீட்டை அடைந்தார்கள்.

சீனு மாமா தெருத் திண்ணையில் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். இவர்கள் கதையைக் கேட்டு அனுதாபப் பட்டார்.

''கனகு!''

''என்ன?'' என்று வந்தவள், எதிரில் நின்ற சாமனியையும், செக்கச் சிவந்த அவள் மேனி வழுவையும், தீர்க்கமான முக லாவண்யத்தையும் கண்டு சம்சயத்தோடு கணவனைப் பார்த்தாள்.

''என்ன, நம்ம நாகத்துக்காக, பிரார்த்தனைக்குப் படைச்ச சேலைதானே இது?''

''ஆமாம் கனகு! ஒரு ஏழைப் பொண்ணுன்னு சொல்வேனே அவதான் இவ.''

''ஏழைப் பொண்ணுன்னு சொன்னேள் சரி... அவள் இளமையாயும், இத்தனை அழகாயும் இருப்பாள்னு சொன்னதில்லையே....''

''கனகு! நீ என்ன சொல்றே?'' அவள் குரல் போன போக்கைக் கண்டு வெகுண்டார் அவர்.

''ஒண்ணும் புரியலையா? இந்த வயசிலே இப்படி ஒரு பெண்ணோடு... தூ... உங்களுக்கு வெட்கமாக இல்லை?''

''கனகு வாயை மூடு... வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோன்னு பேசாதே...''

''சரிதான் நிறுத்துங்கோ... ஆறு பிள்ளைகளுக்குத் தோப்பன் அறிவு கெட்டுப் போய்ட்டாரே....''

''மாமி...மாமி... அப்படிச் சொல்லாதீங்கோ...'' தீனமாகக் குரல் கொடுத்தாள் சாமனி.

''போடி வெளியே... மாமியாம் மாமி... மாய்மாலக்காரி!.... வீட்டுக்கே நேரே வந்துட்டா... வெட்கம் கெட்டவ....''



''உன்னோட சைக்கிளை 'ராத்திரி யோட ராத்திரியா' வித்திட்டியாமே, ஏன்?''

''இந்த ஏழையை ஏன் கேக்கறே... 'பொழுது விடிஞ்சா' ரிப்பேர். அதான் வித்திட்டேன்!''

—ரவி

''அக்கா! வாக்கா போகலாம்!'' ரோஷத்தோடு அவள் கையைப் பற்றி இழுத்தான் ரெங்கன்.

கூண்டுக்குள்ளிருந்து வெளியே வந்த இந்தப் பரந்த உலகில் அவள் தனித்துச் செல்வதா? துணையற்ற அவளுக்கு வெளி உலகம் ஒரு துர்ப்பாக்கிய நிலையை உண்டாக்கி விட்டால்....

''வா அக்கா.. ஏன் கவலைப்படறே? நமக்கு ஆறு குளம் இல்லே....''

அவர்கள் இருவரும் தெருவில் நடக்கின்றனர்.

புயலில் சிக்கிய புல்லாக அவள் நடுங்குகிறாள்.

எதிரில் வரும் ஒரு காரின் விளக்குகள் அவள் மேல் பளிச்சிட்டு விட்டுத் தயங்கி நிற்க முயல்கிறது.

இடியைப் போல் சப்தித்துக் கொண்டு ஊரெல்லாம் கிடுகிடுக்க ஓடிவரும் மோட்டார் பைக்கின் ஒளி, இவள் மேனியைத் தழுவி நிற்கிறது.

ஒரு சைக்கிளின் மினுக்கொளி இவள் மீது படர அதை ஓட்டிச் சென்றவன் இறங்கி இவளை ஏற இறங்கப் பார்க்கிறான்.

இந்தப் புல்லைத் தின்ன எத்தனை புலிகள்!

''அக்கா! இத்தனை நாள் வயிற்றுப் பசிக்காக எத்தனையோ ஏச்சுப் பேச்சுக்களையும், துன்பங்களையும் பொறுத்தோம். ஆனால் மானத்தைக் காப்பாத்திக் கொள்ளணுங்கும் போது இதுக்கு மேல் பொறுக்க முடியாதுக்கா... கொஞ்சம் வேகமாக நட அக்கா... நமக்குக் காவேரிதான் தஞ்சம் அளிக்கப் போகிறது.... அதுக்குள்ளே உனக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடுமோன்னு பயமா இருக்குக்கா....''

ரெங்கன்... ரெங்கன்தான் பேசுகிறான்.

பன்னிரண்டு வயது ரங்கன்தான்!

அர்ஜுனனுக்குக் கீதையைப் போதித்த பார்த்தன் போல் பேசுகிறான்!

என் கேமராவை எடுத்துப் பைக்குள் பத்திரப் படுத்தினேன். ராசியான 'மினொல்டோ'. இதுவரை எடுத்ததெல்லாம் அருமையாக அமைந்திருக்கிறது. உடம்பு முழுக்க ஒருவிதக் குறுகுறுப்பும், லேசான பயமும், பதற்றமும் உற்பத்தியாகி இருந்தது. இதற்கு அவனையும், அவளையும் இன்று படமெடுக்க வேண்டியிருப்பதும் காரணமாய் இருக்கலாம்.

மனசு முழுக்கப் பதற்றமும், கையில், பையில் கேமராவுமாய்க் காத்திருந்த பத்தாவது நிமிஷத்தில் வந்தான் மோகன். அழகாய்த் தெரிந்தான். மெலிதாய் நறுமணம் கமழ்ந்தது.

மோகன் சைக்கிள் கொண்டு வந்திருந்தான். டபிள்ஸில் பத்தாவது நிமிஷத்தில் நாலு தெருக்களைத் தாண்டி அவன் வீடு வந்தது. இறங்கினோம். என் பதற்றம் உச்சத்தை எட்டியது. மாலை வெய்யில் மிக பலவீனமாய், வீர்யமற்றுப் போயிருந்து. எனக்கு வியர்த்திருந்தது. அலட்சியமாய்ச் சைக்கிளைத் தள்ளிப் பூட்டினான் மோகன்.

மோகன் அந்தச் சின்னக் காம்பவுண்ட் சுவரின் கதவைத் தட்டினான். கதவு திறக்கப்பட, ஒரு பொடியன், 'வாங்கண்ணு'வுடன் சிரித்தான்.

பழைய நடுத்தர வீடு. முதலில் முற்றம். தாண்டித் திண்ணை. பிறகு வீட்டின் அறைகள் ஆரம்பமாகியிருந்தன. திண்ணை அகலமாய் வராந்தா போல் இருந்தது. அந்தக் குட்டி வராந்தாவில் இருந்த இரண்டு நாற்காலிகளில் உட்கார்ந்தோம். சுவரில் வரிசையாய்ப் படங்கள். அந்த வீட்டு நபர்களின் வாழ்வில் பல்வேறு நிலைகளைத் தம்முள் கொண்டிருந்தன. இட்டாலியன் பிரிண்டில் உள்ள பெரிய ஜீசஸ் படம் I am with you always என்றது.

ஐம்பதுகளின் ஆரம்பத்தில் இருந்த ஒரு அம்மாள் வர மோகன் தன் வசீகரச் சிரிப்

# காதலோ காதல்

கார்த்திகா ராஜ்குமார்



புடன் வணக்கம் சொல்லிவிட்டு, ''இவன் சார்லி. செகண்ட் பி. எஸ்ஸி. படிக்கிறான்'' என்றான்.

நான் சிரிக்க முயன்றேன். பேசவும் முயன்றேன். இரண்டுமே முடியாமல் ஒரு மாதிரி ஆனேன். அந்த அம்மா சிரித்தார்கள். ஆனாலும் எனக்குக் கோபம் வரவில்லை. காரணம் அந்தக் கனிவு மிகுந்த இன்னொசண்ட் முகம். உடனே மதிப்பை நம்முள் ஏற்படுத்திவிடுகிற முகம். நிறையக் கேள்விகளைக் கேட்டு என்னிடமிருந்து பதில்களைப் பெற முயன்றார்கள்!

நானும் சிரமத்துடன் ஒத்துழைக்க முயன்றேன். அவர்கள் உள்ளே போனதும் மோகன்



''ஏன் நெர்வஸ்ஸா இருக்கிறே சார்லி'' என்றான். எம்பினை எரிச்சலை அடக்கியபடி, ''ச்சேச்சே இல்லையே'' என்றேன் வெளிக்கு. மனத்துள் அவனைத் திட்டியபடி பைக்குள் ஒளிந்திருந்த கேமராவைப் பயத்துடன் பார்த்தேன். ''இவனுக்கென்ன? போட்டோ எடுக்கப் போவது நானில்லையா?''

''சார்லி, அவங்க அம்மாவுக்கும் எங்க அப்பேர் தெரியும். ஏதோ கடவுள் கிருபையால சரின்னுட்டாங்க'' என்றான் மோகன் தன் காதல் தெய்வீகம் என்பதைப் போல.

ஒரு சிறுமி காப்பி டம்ளர்களை எடுத்து வந்தது. துருதுருத்த கண்களுடன் இருந்த அதை அவளின் தங்கை என்றான். இவன் கன்னத்தை நிமிண்ட, அது அழகாக வெட்கப்பட்டுச் சிரித்தது. அதை ரசித்துக் கொண்டிருக்கும்பொழுதே, 'அவள்'' வந்ததை உணர்ந்தேன். குனிந்திருந்த எனக்கு முதலில் கறுப்புப் பாவாடையின் கீழ் அந்த முயல் குட்டிப் பாதங்கள்தான் தெரிந்தன. ஒரு பிரத்யேக இனிய வாசனையும் வந்தது. ஏனோ என்னைப் பயம் மீண்டும் அரித்தது.

''சார்லி... இதான் ரூபி. என்னோட ரூபி. ஏய் ரூபி. இவன் உனக்கு அண்ணனுகணும்'' என்று என் தங்கையாக அவளை ஞானஸ்நானம் செய்வித்தான் மோகன். மெல்ல நிமிர்ந்தேன். ரூபி மென்மையாகச் சிரித்தாள். பியானோவைப் பக்கத்து வீட்டில் வாசித்தது போல. அவள் அழகு என்னை அசரஅடித்தது. நீலத் தாவணியில் தேவதை.

எனக்கு வெகுவாய்ச் சந்தோஷ மேற்பட்டது.

''சார்லி ரொம்ப ரிசர்வ் டைப். அதிகமாப் பேச மாட்டான்.'' மோகன் சொல்ல, ரூபி, உடனே, ''அப்படியாண்ணா?'' என்றாள், ஆச்சரியம் தருகிற சகஜத்துடன். ஜிலுஜிலுவென்று இருந்தது எனக்கு.

''ஏம்மா, உட்காரலாமே நீ...'' என்றேன்.

ரூபி, ''சரிண்ணா''வுடன் சற்றுத் தள்ளி, சுவரில் சாய்ந்தபடி கீழே உட்கார்ந்தாள். இதை நான் எதிர்பார்க்கவில்லை. அவளின் செய்கையில் மகிழ்ச்சி பிடிபடவில்லை, ஏன் என்று தெரியாமலேயே. ஏதோ காலம் காலமாய்ப் பாசம் எங்களுக்கிடையே இருந்தது போலவும், ஒரு மர்ம இடைவெளிக்குப் பின் மறுபடியுமாய் இப்போது அது புதுப்பிக்கப்பட்டிருப்பது போலவும் தோன்றியது.

வீட்டினுள் மற்றவர்கள் இருக்க, அருகில் நான் இருக்க அவர்கள் தங்களுக்குள் சிருஷ்டித்துக் கொண்ட, சின்ன, இனிய உலகத்தை ரசிக்க ஏனோ போட்டோ எடுக்க வேண்டிய நினைவு வந்தது. 'மோகன்' என்ற விளித்தலுடன் அவர்களின் பிரிய உலகத்தில் நுழைந்து, ''லைட் போயிடும். அப்புறம் யூஸ் இல்லே'' என்றதும், அவன் ஒரு கணம் எதிர்ப் பார்வையை என் மேல் வீசிவிட்டு, ரூபியிடம் சொல்ல, மேலே போனோம். 20 × 15 அடி அளவில் 'டெரஸ்'. நான் லொகேஷன் பார்த்தேன். பல மொ. மாடிகள் அதே போல அங்கங்கே! மோகன் பயந்திருந்தான். ரூபியும்கூட. காரணமிருந்தது இதற்கு. சுற்றிலும் தெரிந்

தவர்களின் வீடுகள். யாராவது பார்த்து விட்டால் பிரச்னைகள் வெடிக்கக் கூடும். மாடிக் கைப்பிடிச் சுவரின் உயரம் 3 அடி இருந்தது. இதைச் சொல்லி...

''மோகன்! நீங்க உட்கார்ந்திருங்க. எழுவே வேண்டாம். எழுந்தாத்தான் மத்தவங்க பார்வையில படற ஆபத்துண்டு.'' என்றேன். மோகன் இதை ஆமோதிக்க ரூபி மெலிசாக நடுங்கிக் கொண்டிருந்தாள். நான் என் பையைத் திறந்தேன்.

என் மினுல்டோவின் வ்யூ பைண்டர் அவர்களின் ஜோடிப் பொருத்தத்தை மறுபடி வலியுறுத்தியது. இரண்டு பேருமே கொடுத்து வைத்தவர்கள். இந்தப் பொருத்தம் நூறு சதவிகிதம் சொர்க்கத்தில் தான் நிச்சயிக்கப்பட்டிருக்க வேண்டும். முதல் க்ளிக். பிறகு அவசரமாய்த் தள்ளி க்ளிக். நகர்ந்து க்ளிக், சரிந்து க்ளிக். ஆனால் சகலமும் ஒருவரை யொருவர் தொடாமலேயே. கண்ணியம் மட்டும் காரணமல்ல. பயமும்.

கல்யாணமே நடந்து விட்டதைப் போல மோகன் உணர்ச்சி வயப்பட்டிருந்தான். சிவந்து பிரகாசித்தது அவனின் இருபத்தியொரு வயது முகம். திமரென்று தன் பெயர் கின்னஸ் புக் ஆஃப் வொர்ல்ட் ரிக்கார்ட்ஸில் இடம் பெறப் போகிறது என்று அறிவித்தான். நாங்கள் முழிக்க, ''ஆமாம், இந்த உலகத்திலேயே அதிகம் சந்தோஷப்பட்டதற்காக'' என, ரூபி சிரித்தாள். நான் வியந்தேன். காதல் போதை நிறைந்ததுதான்.

அப்படியே காலை நீட்டிப் படுத்து மந்தகாசமாய்ச் சிரித்தவன் சரேலென இரண்டு முறை உருண்டு, தள்ளிக் கிடந்த சாக்குக் கட்டியை எடுத்தவன், ஒரே துள்ளலில் எழுந்து மண்டியிட்டபடி ஒரு விநோத பிரகாசம் முகத்தில் வர, ஏதோ எதையோ கன்னடத்தில் எழுத ஆரம்பித்தான். பெரிது பெரிதாக.

ரூபிக்குக் கன்னடம் தெரியும். அவர்கள் கர்னாடகக்காரர்கள்தான். மோகன் அவளுக்காகவே கன்னடம் படித்திருந்தான். வெள்ளையாய்த் தெரிந்த அந்த ஜிலேபி கன்னட எழுத்துக்கள் மங்கின வெளிச்சத்தில் மின்னின. எழுதினது.... கிட்டத்தட்ட..., ஒரு கவிதை போல. எனக்கும் கன்னடம் தெரியுமாதலால் புரிந்தது.

'லைலா மஜ்னுவும், ரோமியோ ஜூலியட்டும் தேற்றைய உதாரணங்கள். இன்று நானும் நீயும் இந்தச் சந்ததிக்கு. என் இறுதி மூச்சும் உன் முகம் தழுவி நழுவும். உன்னிலிருந்து என்னைப் பிரிக்க எந்த சக்தி உண்டு இங்கு' — இந்த அர்த்தத்தில் கவிதை. எழுதிய பின் சோகக் காதலனைப் போல மோகன் நின்றிருக்க, ரூபி கண்ணீருடன் விசும்பி அழுதாள். நான் சிலிர்த்திருந்தேன். அவர்கள் இறங்கின பின்னும் அந்த வரிகளை வெறித்திருந்தேன். காதலின் ஓர் உன்னத விஷயமாய்த் தெரிந்த அதை, திடுமென மீதமிருந்த பிலிமில் 'க்ளிக்'கினேன். ரொம்பவும் திருப்தியாய் உணர்ந்தேன்.



தவம் என்பது நீரிலும் நெருப்பிலும் நெடு நேரம் நிற்பது அல்ல: காமமும் கோபமும் இல்லாத நிலையே தவமாகும்.

—கீரன் சொற்பொழிவில் கேட்டவர்: எஸ். கண்ணன்

''**எ**ன்ன படம் சார் இது? ஏதோ கல்வெட்டாட்டம் படம் எடுத்திருக்கீங்க. என்ன இது?''

என்றான் விஜி. என் ஸ்டுடியோ உதவியாளன். நான் நிமிர, அவன் கையில் அந்தப் போட்டோ. 'ஆறு' வருஷங்களுக்கு முன் ரூபி வீட்டில் மோகன் டெரஸில் சாக்பீஸால் எழுதின அந்தக் கன்னடக் கவிதையின் போட்டோ. வெகு அபூர்வமாய், தெளிவாய் அன்று அமைந்துவிட்ட அதை ஒரு உன்னதக் காதலின் நினைவுச் சின்னமென, பெரிதாக என்லார்ஜ் செய்து என் பெர்ஸனல் ஆல்பத்தில் வைத்திருந்தேன். பிறகு தொலைந்து விட்டது என்று நினைத்திருந்ததை திடுமென விஜி இப்போது எங்கிருந்தோ பிடித்திருக்கிறான். இப்போது பார்க்கையில் வேதனை கவிய வெறித்தேன்.

''ஏன் சார் இதைப் படம் எடுத்தீங்க?'' என்றான் விஜி மீண்டும்.

''ஒரு உலக மகா பொய்யை. நான் ஏமாற்றப்பட்டதை, அன்று நிஜமாக இருந்து இன்று பொய்த்துப் போன விஷயத்தை!''

என் குரல் கம்மிற்று.

ஆமாம், ரூபி இன்னும் மோகனுக்காக ஏக்கங்களுடன் காத்திருக்க, மோகன் போன மாதம்தான் ஒரு உயர்ந்த கனவானின் ஏக புத்திரியை விரும்பி மணம் புரிந்து விட்டிருந்தான்.

விஜி திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தான். நான் சொன்னதற்காக மட்டுமல்ல. என் குரல் கம்மினதற்கும், என் கண்களில் ஏன் கண்ணீர் என்று புரியாததாலும்தான்.

# ரத்தப்பணம் என்றால் என்ன?



ந்த இதழில் க்விஸ் கேள்விகளைத் தயாரித்துத் தந்தவர் நளினி சாஸ்திரி (சேகர்)

தபால் மூலம் படிக்கும் எங்களுக்கு ஒரு சான்ஸ் கொடுத்தாலென்ன 'க்விஸ்' நிகழ்ச்சியில் பங்கேற்க? என்று கேட்டார் மிஸ். ராஜி சுப்பிரமணியம், சரி என்றோம். அவரையே அழைத்தோம்.

கூட இன்னொருவரையும் ஏற்பாடுசெய்தோம்.

பங்கேற்றோர்:

மிஸ் ராஜி சுப்பிரமணியம்)
(தபாலில் பி. காம் படிப்பவர், சென்னை பல்கலை கழகம்)

மிஸ் பிருந்தா
(தபாலில் பி. காம் படிப்பவர், மதுரை காமராஜ் பல்கலை கழகம்)

டாவில் வெற்றி பெற்றவர்: பிருந்தா.

க்விஸ் தொடங்கியது. இருவரும் கேட்டுக் கொண்ட கேள்விகளும் அவர்றுக்கு சரியானவிடைகளும்:



O பிருந்தா

1. கொஞ்சம் நிதானமாக யோசித்துச் சொல்லுங்கள். Speed (ஸ்பீட்) என்றால் என்ன?

விடை: பொதுவாக எல். எஸ். டி., மரியுவானா போன்ற போதைப் பொருட்களைக் குறிக்கும். குறிப்பாக Amphetamine

2. ஓமன் நாட்டு கரன்சியான ரியாலின் இந்திய ரூபாய் மதிப்பு சுமாராய் எவ்வளவு?

விடை: சுமார் ரூ. 28.

3. சர்ச்சுக்கும், கதீட்ரலுக்கும் என்ன வித்தியாசம்?

விடை: கதீட்ரலில் பிஷப்புக்கு அரியணை இருக்கும்.



O ராஜி சுப்பிரமணியம்

சர்ச்சில் இருக்காது. (இது ஒரு வித்தியாசம் தானா? குறைந்த பட்சம் ஆறு வித்தியாசம் இருக்குமென நினைத்தேனே என்றார் பிருந்தா.)

4. அமெரிக்காவில் ஒரு நகரம் மோட்டார் கார்களின் நகரம் என அழைக்கப்படுகிறது. அது எது?

விடை: டெட்ராய்ட்.

5. ரத்தப்பணம் (Blood Money) என்றால் என்ன?

விடை: ஒரு கிரிமினல் குற்றவாளியைப் பிடித்துக் கொடுப்பவருக்கு, அல்லது பிடிக்கத் துப்புக் கொடுப்பவருக்குத் தரப்படுகிறபணம்.



O நளினி சாஸ்திரி

6. ஒரு சின்னக் கணக்கு. ஒரு அறையில் எட்டு நண்பர்கள் இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் மற்ற ஒவ்வொருவருடனும் கைகுலுக்குகிறார்கள். அங்கே மொத்தம் எத்தனை கை குலுக்கல்கள் நடக்கும்?

விடை: 28 கை குலுக்கல்கள்.

(விளக்கம்: முதலாவது நபர் மற்ற ஏழு பேருடனும் கை குலுக்குவார். ஆக ஏழு கை குலுக்கல்கள். இரண்டாம் நபர் ஆறு பேருடன் தான் கை குலுக்குவார். ஆக ஆறு கை குலுக்கல்கள். 3-ம் நபர் 5 பேருடன்; ஆக 5 கை குலுக்கல்கள். 4-ம்நபர் 4 பேருடன்; ஆக 4 கை குலுக்கல்கள். 5-ம் நபர் 3 பேருடன்; ஆக 3 கை குலுக்கல்கள். 6ம் நபர் 2 பேருடன்; ஆக 2 கை குலுக்கல்கள். 7-ம் நபர் ஒருவருடன்; ஆக ஒரு கை குலுக்கல். 7 பேரும் எட்டாவது நபருடன் கை குலுக்கி விட்டதால், அவர் தனிப்பட்ட முறையில் யாருடனும் கை குலுக்க முடியாது. ஆக மொத்தம் 28 கைகுலுக்கல்கள்.)

7. வருடத்தில் இரண்டு நாட்கள் இரவும் பகலும், சரிசமமாக 12மணி நேரமிருக்கும். அந்த இரண்டு நாட்கள் எவை?

விடை: மார்ச் 21, செப்டம்பர் 23.

8. டெலிபோனுடன் சம்பந்தப்பட்ட STD என்றால் என்னவெனத் தெரியும். டெலிபோனுடன் சம்பந்தப்படாத STD என்றால் என்ன தெரியுமா?

விடை: Sexually Transmitted Diseases.
(பால்வினை நோய்)

9. காந்தி படத்தின் டைரக்டர் அட்டன்பரோ, படத்தில் நடித்த ஒருவருக்குப் பின்னணிக் குரல் கொடுத்திருக்கிறார். யாருக்கு?

விடை: காந்தியின் செகரட்டரி பியாரிலாலுக்கு.

10. ஒலியின் வேகத்துக்குப் பறக்கும் கன்கார்ட் விமானத்துக்குள் பேசிக் கொள்ள முடியுமா?

விடை: முடியும். ஏனென்றால் அது Sound Proof செய்யப்பட்டது.

11. நம் ஊரில் சிகரெட் பாக்கெட்டுகளின் மேல், 'ஸ்மோக்கிங் இஸ் இஞ்சூரியஸ் டு ஹெல்த்' என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிறதல்லவா? வெளிநாடுகளில் என்ன எழுதப்பட்டிருக்கும் தெரியுமா?

விடை: Warning: The surgeon General has determined that Cigarette smoking is dangerous to health. என்று.

12. 'ஹைகூ' என்பது என்ன?

விடை: ஜப்பானிய நாட்டில் ஒரு வகை கவிதைகளுக்கு ஹைகூ என்று பெயர். திருக்குறள் போல சுருங்கச் சொல்லி விளக்கும் டைப்.

13. Mr. Red Line இதைத் தமிழில் மொழி பெயர்த்தால் தமிழ் நாட்டில் உள்ள ஒரு ஊர் கிடைக்கும். அது என்ன?

விடை: திருச்செங்கோடு

14. உலகில் மிக இளம் வயதில் டெஸ்ட் மாட்சில் ஆடிய கிரிக்கெட் வீரர் முஷ்டாக் முகமது (பாகிஸ்தான் 15 வயதில்) என்பது தெரியும். இந்தியாவில் இந்தப் பெருமை யாருக்கு?

விடை: எல். சிவராம கிருஷ்ணன் (17 வயது)

ஒருசில கேள்விகளுக்குச் சரியான விடை சொல்லாவிட்டாலும் இருவருமே சட் சட்டென்று பதில் சொல்லி, 'க்விஸ்' நிகழ்ச்சிக்கு விறுவிறுப்பைக் கூட்டினர். ரொக்கப் பரிசு பெற்றவர் ராஜி. தவிர இருவருமே புத்தகப் பரிசுகள் பெற்றனர்.

நிகழ்ச்சி ஏற்பாடு, தொகுப்பு
எல். சந்திரமௌலி
ப்ரியன்
புகைப்படம்: ஸ்பைடர்











# ‘காதில் மணியோசை’ கேட்டால் கவனியுங்கள்!

நண்பர் ஒருவருக்குத் திடீரென்று இடது காதில் மணியோசை மாதிரி (Ringing Tone) கேட்கத் தொடங்கியது. காது - மூக்கு - தொண்டை வைத்தியர் ஒருவரை அணுகிச் சிகிச்சை பெற்றுக் கொண்டார். ஆனால் அதில் குணம் ஏதும் தெரியவில்லை. மறுபடி காதில் மணி ஓசை போலக் கேட்கத் தொடங்கிற்று. இம்முறை நண்பர் இன்னொர் ENT நிபுணரிடம் சென்று தம் குறையைச் சொன்னார். அவர் பரிசோதித்துப் பார்த்துவிட்டு, வலது காதுக்குச் சிகிச்சை செய்து, ‘இனி எல்லாம் சரியாகி விடும். போய் வாருங்கள்!’ என்று நண்பரை அனுப்பி வைத்தார். நண்பரின் போதாத காலம் ஓசை கேட்பது நிற்கவில்லை. நாலைந்து நாட்களுக்குப் பிறகு, வாங்கி வைத்திருந்த துணியை எடுத்துக்கொண்டு தமக்குச் சட்டைகள் தைக்கத் தமது தையற்காரரிடம் போனார். காலர் அளவு எடுக்கும்போது தையற்காரர், 15½ என்றார். நண்பருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ‘‘என்னய்யா இது! வழக்கமாக எனது காலர் அளவு 14½ தானே? ஏன் 15½ வைக்கிறீர்?’’ என்றார் கோபமாக. தையற்காரர் அமைதியாக, ‘‘சார், 14½ காலர் வைத்து அதில் பட்டனைப் போட்டு, அதன் மேல் இறுக்கமாக ‘டை’யையும் கட்டினால் காதில் ரிங்கிங் டோன் கேட்கும். அப்புறம் என்னைக் குற்றம் சொல்லாதீர்கள்!’’ என்றார்.

நண்பருக்கு இன்னொரு முறை தூக்கி வாரிப் போட்டது. ‘அட, ஒரு தையற்காரர் எவ்வளவு எளிதாக நமது குறையைக் கண்டு பிடித்து விட்டார்! இதற்குப் பெரிய வைத்தியர்களிடம் போய் ரூபாயைச் செலவழித்தோமே—’ என்று தோன்றிற்றும் அவருக்கு.

‘‘இது சாத்தியமா’’ என்று காது — மூக்கு — தொண்டை சிகிச்சையில் நிபுணரான டாக்டர் கே. கே. ராமலிங்கம் அவர்களிடம் கேட்டோம்.

‘‘தையற்காரர் சொன்ன காரணத்தில் மிகையேயில்லை மிக உண்மையான ஸ்டேட்மெண்ட்’’ என்றார் டாக்டர் ராமலிங்கம். ‘‘கழுத்தின் இரு புறமும் செல்லும் ரத்தக் குழாய்கள், காலர் இறுக்கத்தினால் நெரிக்கப்பட்டு விடுவதால், காதில் ரிங்கிங்டோன் வருவது சாத்தியமே!’’

சுவாரஸ்யமான— உபயோகமான இரண்டு மணி நேரப் பேட்டியிலிருந்து, இதோ சில பகுதிகள்:

ஆபரேஷனுக்கு வருகிற கேஸ்களில் அதிகமானவை ஒட்டோஸ்பாஞ்சியோஸிஸ் தான், என்று டாக்டர் தெரிவித்தார்.

‘‘ஒரு பெண்ணுக்குத் திருமணம் ஆயிற்று. ஆன சில மாதங்களிலேயே காது கேட்பது சிறிது சிறிதாக மந்தமாகி, ஒரேயடியாய்ச் செவிகேளாமல் போயிற்று.. கணவருக்கோ எரிச்சல். ‘என்னடா இது. கல்யாணத்துக்கு முன்பே பெண்ணுக்கு இந்தக் குறை இருந்திருக்குமோ. சொல்லாமல் மறைத்து, திருமணத்தை

டாக்டர் கே. கே. ராமலிங்கமும் அவரது ஆபரேஷன் தியேட்டரும்



நடத்தி விட்டார்களோ?' என்றெல்லாம் அவருக்கு மனக் குமைச்சல். கணவன்-மனைவியிடையே இதனால் மனஸ்தாபம் ஏற்பட்டு, மனைவி பிறந்த வீட்டுக்குச் செல்ல வேண்டிய நிலை உருவாயிற்று. பெண்ணின் பெற்றோர் வருத்த மடைந்து அவளை அழைத்துக்கொண்டு வந்தனர். காது நிபுணர் ஓட்டோ ஸ்பாஞ்ஜியோஸிஸ் எனும் வியாதி இருப்பதாகக் கண்டு பிடித்து ஸ்டெப்பிடெக்டமி எனும் அறுவைச் சிகிச்சை செய்த பின் காது நன்றாகக் கேட்கத் தொடங்கிற்று. சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் குடும்பம் நடத்துகின்றனர்.''

''ஓட்டோ ஸ்பாஞ்ஜியோஸிஸ் என்றால் என்ன?''

''இருபது பேரில் ஒருவருக்கு இது சாதாரணமாக வருகிறது. உட்காதைச் சுற்றியுள்ள திடமான எலும்பு (Hard bone) மென்மையாக மாறி, புது எலும்பாக வளருவதுதான் இந்த நோய்க்குக் காரணம். அதிலும் பெண்களுக்கே இது அதிகமாக வரும். சுமார் பதினேந்து வயதில் இது வருகிறது. பிறகு மெல்ல மெல்லச் செவிட்டுத் தன்மை ஆரம்பமாகிறது. முதல் பிரசவத்தின் போது இன்னும் மோசமாகும். இரண்டாம் பிரசவத்தின் போது மேலும் மோசமாகும்.

ஸ்டெப்பிடெக்டமி என்ற அறுவைச் சிகிச்சை மூலம் இதைக் குணப்படுத்தலாம். காதினுள் இருக்கும் சுத்தியல் எலும்பு, பட்டறை எலும்பு, அங்க வடிவு எலும்பு இம் மூன்றில் கடைசியாகக் குறிப்பிட்ட அங்க வடிவு எலும்பைச் சுற்றி மென்மையான புது எலும்பு வளர ஆரம்பித்தால், அதை எடுத்துவிட்டு, பிளாஸ்டிக் எலும்பை (Teflonpistcn) பொருத்தி விட்டவுடன் குறை நீங்கி விடுகிறது. காது கேட்கிறது. ஆபரேஷன் டேபிளிலேயே அறுவைச் சிகிச்சை முடிந்த உடனேயே நோயாளி, ''எனக்கு இப்போது காது நன்றாகக் கேட்கிறது டாக்டர்!'' என்று சொல்வதுண்டு. ஆபரேஷன் ஆன சில நாட்களுக்கு எந்த ஒலியும் மிகப் பெரிதாகக் கேட்பதுபோல தோன்றும். ஆனால் போகப் போகச் சரியாகி, சாதாரணமாகக் கேட்கும்.

''செவிக்குழாய் வழியே சில சமயம் உள்ளே தண்ணீர் போய் விடுகிறதே இது கெடுதலா?''

''இதனால் பெரிதாகக் கெடுதல் ஏதும் இல்லை. ஆனால் செவிக் குழாயில் குரும்பி இருந்து உருண்டையாகி அடைத்துக் கொண்டால், இந்தத் தண்ணீரும் சேர்ந்துவுடன் அது பெரிதாகிச் செவிக் குழாயை முழுதாக அடைத்துக் கொண்டு தொல்லை கொடுக்கும். அப்போது டாக்டர் அந்தக் குரும்பியை வெளியேற்றி விட்டு, சாதாரண சிகிச்சை அளிப்பார். காதும் சரியாகி விடும்.''

**''கண் பார்வை சரியில்லை என்றால் உடனே நமக்குத் தெரிகிறது. காதில் அப்படி வெளிப்படையாக ஒன்றும் அறிகுறிகள் தெரிவதில்லையே ஏன்?''**

''ஜம்ஷெட்பூரில் ஒரு ஒன்பது வயதுப் பெண். காலையில் பள்ளிக் கூடத்துக்கு வழக்கம் போல் புறப்பட்டாள். பள்ளிக்கூட யூனிபார்ம் போட்டுக் கொண்ட பிறகு, ஷூஸ் மாட்டி, லேஸ் முடியக் குனிந்தாள். முடியவில்லை. 'அப்பா லேஸ் போட்டுக் கட்டி விடுங்களேன்!' என்றாள். அப்பா லேஸைக் கட்டி முடி போட்டார். பெண் பள்ளிக்கூடம் போனாள். மாலை அவள் பள்ளியிலிருந்து திரும்பி வரும்போது அவளுக்கு இரண்டு காதும் சுத்தமாகக் கேட்கவில்லை. இதைத் திடீர் செவிட்டுத் தன்மை (Sudden deafness) என்போம். அந்தப் பெண் காது கேட்கும் சக்தி இழந்து சில வருடங்கள் ஆகின்றன. இன்னமும் காரணம் எதுவாக இருக்கும் என்று தெரியவில்லை. வைரஸ் — விஷக் கிருமிகள் காரணமாயிருக்கலாம். சிலவேளைகளில் அதீதமான சளி பிடித்திருக்கலாம். மீஸல்ஸ் வந்திருக்கலாம். பிறகு செவிட்டுத் தன்மை வருவதுண்டு. இதை எதற்குச் சொல்கிறேன் என்றால், காதில் சீழ் வடிதல், குத்தல், வலி எதுவும் வெளிப்படையாகத் தெரியாமலே இது போல வருவதுண்டு.

''மாறுபடுகிற செவிட்டுத் தன்மை அல்லது Fluctuating deafness என்றும் ஒருவகை உண்டு. இன்று காது சரியாகக் கேட்கும். மறுநாள் கேட்கவே கேட்காது. இன்னொரு நாள் கேட்கும்! காதிற்குப் போகும் ரத்தக் குழாய் சுருங்கி விரிவதால், இந்த மாறுதலுக்கு ஏற்ப செவிப் புலனில் இந்த மாறுபாடு உண்டாகிறது.




மினீர் கொன்றை

என்னதான் கடுமையான கோடையானாலும் கொன்றை மலர்கள் பூத்துக் குலுங்கிக் கண்ணுக்கு இதமளிக்கத் தயங்காது. செஞ்சடை மேல் மினீர் கொன்றை அணிந்தவனை நினைவூட்டவும் தவறாது.

மேலட்டை:
வண்ணப் படம்
வித்யாவ்ரதா.

“வயது ஆனவர்களுக்கு நரம்புத் தளர்ச்சியால் செவிட்டுத் தன்மை உண்டாகும். அவர்கள் பேசுவது அவர்களுக்கே கேட்காத மாதிரி தோன்றும். அதனால் இரைந்து பேசுவார்கள்.

“கோபிச்செட்டி பாளையத்தில் ஒரு நண்பர். அவருக்குப் பல வருஷங்களாகக் காது கேட்கவில்லை. ஆபரேஷன் செய்து கொண்ட பிறகு, காது நன்றாகக் கேட்கத் தொடங்கிற்று. ஆனாலும், அந்தப் பெரியவர் தமக்குக் காது பழைய படி கேட்கவில்லை என்று சொன்னார். காது கேளாத மாதிரியே நடிக்கவும் தொடங்கினார். அவரை மறுபடி அழைத்து வந்து பரிசோதித்தபோது, உண்மையை ஒப்புக்கொண்டார். அவர், காது கேளாதமாதிரி நடித்தபோது, தம்மைப் பற்றி மற்றவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று தெரிந்து கொள்வதில் அவருக்கு ஓர் ஆசை இருந்திருக்கிறது. அதைக் கேட்பதில் இருந்த ஆர்வம் காரணமாக, தமக்குக் காது கேளாத—மாதிரியே நடித்தாராம்!

**“டான்ஸில்ஸ் ஆபரேஷன் செய்கிறார்களே, தேவையா?”**

“டான்ஸில்ஸ் பழுதடையாமல் இருந்தால் அது ஒரு வாட்ச் மேன் போல் நமக்கு நிச்சயம் உதவும். ஆனால் வீங்கி அழற்சி ஏற்பட்டால் (Infected tonsils) நமக்கே தீங்கு இழைக்கும் வாட்ச்மேனுக்குச் சமம். அப்படிப்பட்ட காவலாளி தேவையா? அதை எடுத்து விடுவதுதான் நல்லது. இல்லையென்றால் நெஃப்ரைடிஸ் (Neohritis)ருமாடிக் ஹார்ட் டிஸீஸ் (Rhteumatic Heart Disease) முதலியவை வர ஏதுவாகும்.”

**“காதில் சில சமயம் ‘கும்மென்ற ஒலி(Buzzing sound)வருகிறதே,ஏன்?”**

“காதிற்குள் நம்மையறியாமலேயே ஒரு ஓசை கேட்கிற மாதிரி இருக்கும். அது எப்படி இருக்கிறது என்று கூட நம்மால் விவரிக்க முடியாதபடி அந்த ஒலி வந்து கொண்டிருக்கும். இதற்கு டினிடஸ் (Tinnitus) என்பார்கள். இதிலும் இரண்டு வகை உண்டு. சப்ஜக்டிவ் டினிடஸ், ஆப்ஜக்டிவ் டினிடஸ் என்று. முன்னதில் நோயாளி மட்டும் தமது காதில் கேட்கக் கூடிய ஓசை. மற்றது, தகுந்த உபகரணங்கள் இருந்தால், இரண்டாவது நபரும் கேட்கக்கூடிய மாதிரி இருக்கும். அந்த ஒலியைப் பெரிதாக்கிக் கேட்கலாம். செக்-கார்ட் செய்யலாம். காதருகில் இருக்கும் சிறிய சதைப் பகுதி சுருங்குவதாலும் விரிவடைவதாலும் இந்தச் சத்தம் கேட்கிறது. இதற்கு ‘டினிடஸ் மாஸ்க்கர்’ என்பது நவீன வைத்திய முறை.

**“ஈ.என்.டி. ஆபரேஷன்களில் தற்போதைய முன்னேற்றம் என்ன?”**

“பிட்யூடரி சுரப்பியில் கட்டி வந்தால், முன்பெல்லாம் அறுவைச் சிகிச்சைக்காக நியூரோ சர்ஜன் மூளைப் பகுதியைத் திறந்து ஆபரேஷன் செய்து கொண்டிருந்தார். இப்போதெல்லாம் ENT சர்ஜன் மூக்கு வழியாக இந்த ஆபரேஷனைச் செய்து விடுகிறார். செய்த பிறகு வடுவோ, பக்கவாதமோ ஏற்படுவதில்லை என்பதோடு, ரிஸ்க் அல்லது ஆபத்துக்கள் இதில் மிகக் குறைவு.

“இதயத் துடிப்பு சீராக இருப்பதற்கு உடம்பிலேயே ‘பேஸ் மேக்கர்’ வைத்துக் கொள்வது போல, காது சரியாகக் கேட்கக் காதில் Cochlar Implant செய்து விடுகிறார்கள். அமெரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும் இது மாதிரி கருவியைச் செய்து வருகிறார்கள்.

“இதயம், சிறுநீரகம், கண் இவற்றை டிரான்ஸ்பிளான்டேஷன் செய்வது போல, செவிப் பறை மற்றும் நடுக் காதில் உள்ள சிறு எலும்புகளையும் டிரான்ஸ்பிளான்டேஷன் முறையில் வெற்றிகரமாகச் செய்து வருகிறார்கள். புது தில்லியிலுள்ள Ear bank பாராளுமன்றத்தில் இதற்கான சட்டம் இயற்றிய பிறகு, வெற்றிகரமாக இயங்கி வருகிறது.

“நமது நாகரிக வளர்ச்சிக்கு நாமே கொடுக்கும் விலைதான் இரைச்சல் அல்லது சத்தச் சூழ்நிலைக் கேடு. (Noise pollution) சத்தம் நம் காதை மட்டும் பாதிப்பதில்லை. கருவில் இருக்கும் குழந்தையைக் கூடப் பாதிக்கிறது என்று இந்தத் துறையில் ஆராய்ச்சி செய்பவர்கள் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்.

“முன்பு கொய்னா மாத்திரை சாப்பிட்டுக் காது செவிடாயிற்று என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். இப்போது பிரைமரி காம்ப்ளெக்ஸ் என்று குழந்தைகளுக்கு வரும் ஆரம்ப காச நோய்க்குக் கொடுக்கப்படும் ஸ்ட்ரெப்டோமைசின் ஊசிகளும் கூட, செவிட்டுத் தன்மை உண்டாக்கும்.”

பேட்டி: **கே.சி, தமயந்தி**

---

**சில குறிப்புகள்:**

1. காதைக் குச்சி, பின் போட்டுக் குடையாதீர்கள்.
2. காதுக்குள் எண்ணெய் ஊற்றிக் கொள்ளாதீர்கள்.
3. காதில் ஈ, கொசு அல்லது எறும்பு புகுந்து கொண்டு விட்டால், முதலுதவியாக உப்புக் கலந்த நீரைச் செவியினுள் விடுங்கள். காதிற்குள் போன ஜந்து வெளியே வந்து விடும். அப்படியே வரவில்லை என்றாலும் நீங்களாக எடுக்க முயல வேண்டாம். மறு நாள் ENT டாக்டரிடம் காண்பிக்கவும்.
4. காதிலிருந்து சீழ் வடிந்தால் அசட்டை செய்யாதீர்கள். இது அசுத்தமானது மட்டுமல்ல, காதுச் சீழ் மூளைக்குப் பரவி விட்டால் வெகு சீரியஸாகி விடும். மூளைக் கட்டி (Brain Abcess) வந்து உயிரையே இழக்கும் சூழ்நிலை உருவாகி விடும்.
5. இரைச்சல் மிக்க தொழிலகங்களில் வேலை செய்பவர்கள் வைத்தியரிடம் அவ்வப்போது காதை செக்-அப் செய்து கொள்ள வேண்டும்.

# இரும்பு குதிரைகள்

### அத்தியாயம் 27

**பே**சியது அத்தனையும் முரட்டுத்தனம் தானே... துக்கிரித்தனம்தானே யாருக்கோ என்னவோ பிடித்திருக்கிறது; எனக்கென்ன அதனால். என் மறுதலிப்பின் அவசியம் என்ன? அபிப்பிராயம் கேட்டாலும் கூட சிரித்து விட்டுச் சும்மா இருக்க ஏன் முடியாது போகிறது? முட்டாள் என்று இரைச்சலிடுகிற கோபம், குமுறுகிற சீற்றம் எதனால்? அவனைக் காயப்படுத்திப் பலன் என்ன? இந்தத் தமிழ் தேசத்தின் லட்சோப லட்சம் ஆண்களில் அவனும் ஒருவன். சராசரி புருஷன். பேண்டும் சட்டையும் பிடரி மயிரும் தான்நவீனமே ஒழிய புத்தி முழுதும் பழமை. சிந்தனையற்ற பழமை. கேள்வியற்ற குணம்.

இதைக் கண்டு நான் ஏன் பொருமுகிறேன். ஏன் பதறித் துடிக்கிறேன். என் அறிவை என் யோசனையை வார்த்தை அமிலமாய்



## பாலகுமாரன்

மாற்றிப் பிறர் முகத்தில் ஏன் ஊற்றுகிறேன். ஏன் நாகரீகம் தெரியாமல் பேசுகிறேன்.

எனக்கும் தமிழ்தான் மூச்சு. ஆனால்
பிறர் மேல் அதை விட மாட்டேன்.

யார் கவிதை இது... ஞானக் கூத்தனா... தன் மூச்சுக் காற்றுக்கூடப் பிறர் மேல் படாமல் விலகிக் கொள்கிற நளினம் என்று வரும் எனக்கு? என் அபிப்பிராயத்தை உரத்துச் சொல்லிப் பிறரைத் தாக்குவது ஏன்?

ஆனால் இப்படி ஊசியாய்ச் சொல்கிற போதுதான் மனசில் தைக்கும்படி நேரிடுகிறது. பசி என்று அறைகிற போதுதான் நிதானம் கொண்டுவர முடிகிறது. உனக்கு கிறபோதுதான் போதை கட்டவிழ்கிறது.

''உங்கள் வயது என்ன காயத்ரி''—படையன் என்னவோ இவன் கல்ப கோடி காலம் வாழ்ந்து கண்டவன் போல வயது கேட்கிறான். அனுபவத்தை. அறிவை வயதோடு இணைக்கிறவன் நிச்சயம் முட்டாள்தான்.

நெற்றிக்கு நடுவே சுடரை நிறுத்தியோசிக்கும் விஷயத்தை அச்சுடருள் பொதித்து நேர்க் கோடாய் அவ்விஷயத்துள் இறங்கி ஒன்றன் பின் ஒன்றாய்க் கேள்வி கேட்டுப் பிரித்து அறிதல் வயதின் துணையா? காற்று மாதிரி புத்தி அலைந்து அலைந்து பரவித் திசையற்று ஓடுவதை அனுபவம் என்று அறிவு என்று சொல்கிறாய்?

நெற்றிக்குள் சுடரை எப்போதும் தரித்திருப்பவன் சூழ்நிலை மறப்பானா? சென்ட்ரல் ஸ்டேஷன் வருவது தெரியாமல் போவானா?

நான் இப்படித்தான் எரிப்பேன். தீயாய் சுடுவேன். நெற்றி நடுவில் மட்டுமில்லை. உடம்பே ஒரு சுடராய்த் தெரிகிறது எனக்கு. சகல புலன்களும் மயக்கம் இன்றி விழித்திருக்கின்றன என்னுள்.

அவன் மந்தமா யிருப்பது அவன் குற்றமில்லை காயத்ரி. இன்றையசூழ்நிலை இவ்விதம். எவ்வளவு மயக்கம் தர முடியுமோ அவ்வளவு மயக்கம் ஊட்டப்படுகிறது. வலிக்கு பயந்து மாற்றி மாற்றிப் பெதடின் போட்டுக்கொள்கிற வியாதிக்காரன் போல நிஜம் நெஞ்சுக்குத் தெரியவே கூடாது என்று ஜனங்கள் ஆசைப்படுகிறார்கள்.

உன் மூர்க்கம் அவனை மேலும் சிலிப்படுத்தும், சிலம்மேலும்போதையை உட்கொள்ள வைக்கும். உன் எண்ணத்தை அவனுக்கு அறிவித்தல் முக்கியமே ஒழிய அவனுக்குப் புரியும் வகையில் பரிமாறுவது சிறப்பே தவிர கோபம் வேதனையைத்தான் தூண்டும். புரிதல் இல்லாமல் அறிந்து கொள்ளும் ஆவலைத் தாண்டாமல் நகரச் செய்யும்.

இரவு வேளைக்கான சாதம் மட்டும் குக்கரில் வைத்து விட்டு காயத்ரி மேல் மாடியில் சுவரோரம் மோடாவில் உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தாள். இருள் மெல்லக் கவிழும் வானத்தை வெறித்துக் கொண்டிருந்தாள். அவள் உட்கார்ந்திருந்த பக்கம் பாம்பே கோடவுன் பகுதி. பெட்டிகள் உயரமாய் அடுக்கப்பட்டுத் தார்பாலின் போட்டு மூடப்பட்ட பகுதி. கௌசல்யா வசிக்கும் பகுதி.

ஏழு மணிக்குச் சோற்றுக் கடை முடிந்து விட்டது. அப்பா இன்னும் மேலே வரவில்லை. எட்டு மணி வரை வேலை இருக்கும் அவருக்கு. வந்தவுடன் குட்டித் தூக்கம் போட்டுவிட்டுத்தான் சாப்பிட உட்காரப் போகிறார். அதுவரை என்ன செய்வது? கௌசல்யாவை வரச் சொல்லலாமா? மழலையாய் அவள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கலாமா? விஸ்வநாதன் பேச்சையும் மழலை என்று ஏன் எடுத்துக் கொள்ள முடியவில்லை.

''கௌசல்யா!''—காயத்ரி குரல் எழுப்பும் முன்னால் யாரோ முந்திக் கொண்டார்கள்.



அவன்: நான் உங்க ஆபீஸில் வேலைக்குச் சேர்ந்தால் ஆண்டுக்கு ஒரு முறை சம்பள உயர்வு தருவீங்களா ஸார்?

மானேஜர்: நீங்க நல்லா வேலை செய்தால் நிச்சயம் சம்பள உயர்வு உண்டு!

அவன்: தெரியுமே. இப்படி ஏதாவது ஒரு கண்டிஷன் போட்டு எல்லா ஆபீஸிலேயும் தப்பிச்சுக்குவீங்களே!

—சரஸ்வதி பஞ்சு



**கடவுள்:**

உயர்ந்த நிலையிலிருந்து இறங்கி நமது நெஞ்சுக்கு வருபவன்.

உருவமற்றவன்.

நாம் வணங்கும் தெய்வத்தின் உருவில் காட்சி தருகிறான்.

கருணை இயற்கையானது.

பக்தன் சாமானியனாக இருந்தாலும் அவனது நெஞ்சத்தில் நுழைந்து விடுவான்.

—கீரன் சொற்பொழிவில்

சின்ன சிம்னி விளக்கோடு பெட்டி இடுக்கில் நின்று தேடினார்கள். குரல் ஆண் குரலாய் இருந்தது. புல் தரையில் பட்டுப் பூச்சியென இருட்டுப் பச்சையென விளக்கொளி அலைந்தது. நின்றது, நகர்ந்தது.

சந்திலிருந்து கௌசல்யா ஓடி வந்தாள்.

''வந்திட்டியா'' என்று கனத்த குரலில் வினவினான்.

''ஏன் கண்ணு, தப்பிச்சிட்டியா?'' — ஓசை பற்ற பாம்பே கோடவுனிலிருந்து அவர்கள் கிசுகிசுப்பது கூட மேலே தெளிவாய்க் கேட்டது. சிம்னி விளக்கு ஏந்தியவன் அதைப் பெட்டியின் மீது வைத்தான். முன்னே நகர்ந்து கௌசல்யாவை அள்ளி அணைத்துக் கொண்டான்.

''என்னு இது நொளஞ்சதும் வலிக்கக்கிற. வுடு என்னை.'' கௌசல்யா சிணுங்கினாள். ''ஓடியாந்திட்டியா?'' மறுபடி கேட்டான். ''ராவுத்தர் ஜாமீன்ல இட்டாந்துட்டாரு. ஊருக்குப்போய் என் அம்மாவைப் பார்த்துட்டு வான்னாரு. நான் இங்க ஓடியாந்துட்டேன்.''

''ச்சீ போ. ஆத்தாவப் பாக்காத இங்க வந்து என்னு ஆட்டம்.'' தளர்த்திக்கொண்டான்.

ஓ, இவன் கௌசல்யாவின் ஆளோ, கைதாகிக் கூட்டிப் போகப்பட்டவனோ?

''கேஸு என்ன ஆச்சு?''

''வர்ற திங்கக் கிழமை முடியும். கோர்ட்டுக்குப் போவணும். அப்புறம் நேரா ஜெயில். மூணு மாசமோ நாலு மாசமோ''

''நிச்சயம்தானா?''

''ராவுத்தர் வக்கிலே சொல்லிட்டாரு. இதுக்கு மேலே ஒண்ணும் செய்ய முடியாதுன்னுட்டாரு.''

''ஓடியாந்திடலியே.''

''ஏன், ஓடியாந்தா சேத்துக்கமாட்டியா?''

''என் ராசா... உன்னியச் சேக்காத என்னாத்துக்கு நான் பொம்பளையா...''

கௌசல்யா மறுபடி அவன் முரட்டுப் பிடியில் சிக்கினாள். சிரிப்புடன் தவித்தாள். படபடக்கிறவளை அனுமதித்தான். சிம்னி விளக்குக் குதியாட்டம் போட்டது. நிழல்கள் சுவரில் அலைந்தன.

''மூட்ட மூட்டக் குடிச்சிருக்கியா? எனக்கு என்ன வாங்கியாந்தே?''

சிம்னிக்காரன் சட்டையைத் தூக்கி பாட்டிலைக் காட்டினான். கௌசல்யா அதை வாங்கிக்கொண்டு பெட்டிகளுக்கிடையில் நுழைந்து தார்பாலின் மறைப்புக்குள் புகுந்தாள். சிம்னியும் வந்த ஆளோடு உள்ளே நுழைந்தது. பெட்டிகள் காயத்ரி எட்டிப் பார்க்கும் சுவரிலிருந்து நான்கு அடி தள்ளி அடுக்கப்பட்டிருந்தன. உள்ளே நுழைந்தவர்கள் தார்பாலினைச் சரித்து மறைப்புக் கட்டி பெட்டிக்கும் சுவருக்கும் இடைப்பட்ட வெளியில் உட்கார்ந்து கொண்டார்கள். கோடவுனுக்குள் வருகிற நபர்களுக்கு அது மறைப்பே தவிர உயரத்தில் உட்கார்ந்திருக்கிற காயத்ரிக்குஅது வெட்ட வெளிச்சமாய் இருந்தது. கௌசல்யா ஆயத்தமாவது தெரிந்தது.

காயத்ரி அவளை அசையாமல் வியப்புடன் பார்த்தாள். இரண்டு மிடறு பாட்டில் திரவம் விழுங்கிவிட்டு வெற்று நெஞ்சைத் தடவிக்கொள்வதைப் பார்த்தாள். அதே பாட்டிலை அவனுக்கு ஊட்டி விடுவதைப் பார்த்தாள். இது என்ன, இது என்ன என்று வியப்புடன் டார்த்தாள்.

பூவில் வண்டு கூடும்
கண்டு போகும் கண்கள் மூடும்
பூவினம் மாநாடு போடும்
வண்டினம் சங்கீதம் பாடும்

விஸ்வநாதன் குரல் அவள் காதோரம் ஒலித்தது. யப்பா... எத்தனை சந்தோஷம் இவர்களுக்கு! எத்தனை கொஞ்சல்! எத்தனை இறுக்கம்... எவ்வளவு முரட்டுத்தனம்... கௌசல்யா ப்ளீரென்று தன்னைக் கலைத்துக்கொண்டபோது காயத்ரியின் முதுகுத் தண்டு சிலிர்த்து அடங்கிற்று.

இதுதான் புருஷன் மனைவி என்கிற உறவின் அர்த்தமா? அன்பு என்பதன் வெளிப்பாடு இப்படித்தானா? இந்த இரண்டு பேரும் என்ன சந்தோஷமாய் இருக்கிறார்கள்! இவர்கள் சந்தோஷம் எவ்வளவு அழகாக இருக்கிறது. எனக்குள் எவ்வளவு சந்தோஷம் வருகிறது. மேலே இருந்து ஒரு கூடைப் பூவைக் கொட்ட வேண்டும் போல சந்தோஷம் வருகிறது. வேண்டாம். அவர்களை இதழ் அளவுகூட திசை திருப்ப வேண்டாம். லெட் தெம் பி ஹேப்பி. காயத்ரி எதிர்ப் பக்கம் திரும்பி உட்கார்ந்து கொண்டாள். கண்களை மூடிக் கொண்டாள். நெற்றியில் சுடர் தெரிந்தது. சுடருக்கு உள்ளே சிம்னி



**தண்ணீர்**

மேட்டி லிருந்து பள்ளம் நோக்கி ஓடிவருவது.
உருவமற்றது.
பாத்திரத்தின் உருவத்தைப் பெறுகிறது.
குளிர்ச்சி இயற்கையானது.
சிறிய துவாரமா யிருந்தாலும் அதனுள் நுழைந்துவிடும்.
கேட்டவர் எஸ். கண்ணன்

விளக்குக்காரனும் கௌசல்யாவும் பிணைந்து கிடந்தார்கள். இது இயல்பு. இயற்கை அளித்த வரம். புருஷனின் முரட்டுத்தனமும் பெண்மையின் குழைவும் எதிர் எதிராய் நின்று வசீகரித்த விதம். இந்த வசீகரம் ஒரு சூட்சுமத்தை உள்ளே வைத்துக் கொண்டிருக்கிறது. மனிதச் சங்கிலி அறுந்து போகாமல் இருக்க சர்ப்பு உபயோகப்படுகிறது. பசியின் உந்துதலால் வண்டு வரினும் அவன் வருகை பசியின் பொருட்டு மட்டுமில்லை. புஷ்பம் தேனைத் தக்க வைத்திருப்பது வண்டின் புசிக்காக மட்டுமில்லை.

எனக்கு இலை மாதிரி வயிறு. இந்த வயிறு உணவு செரிக்க மட்டுமில்லை. இதற்கு வேறு ஒரு வேலையும் இருக்கிறது. ஒரு உயிரை, ஒரு மனிதனை நான் சுமந்து வழங்க வேண்டிய விதமாகவும் அமைந்திருக்கிறது. என் கை கால் தோள், மார்பு உதடு எல்லாம் என் உடல் அமைப்பு முழுதும் இத்தொடர்புச் சங்கிலியின் பொருட்டே படைக்கப்பட்டிருக்கிறது. நான் பெண்ணாய்ப் பிறந்திருக்கிறதன் பெரிய பர்ப்பஸ் தாயாய் மாறுவதுதான். என் முக்கிய வேலை இதுதான். இதை முன்னிட்டே பிற காரியங்கள். இந்தத் தொடர்பு சங்கிலி இல்லை எனில் என் இன்றைய எந்த வேலையும் பயனில்லை. இது அறுந்துவிடும் எனில் என் இருப்பும் முக்கியமில்லை.

கூடல் என்பது சிலர், சொல்வது போல் அசிங்கமும் இல்லை, பலர் கொண்டாடுவது போல் ஆரவாரமும் இல்லை. அது அமைதியான விஷயம். தலையாய காரியம். கவிதை மாதிரி கவனமான சமாசாரம். போகம் பிள்ளை பெறுதல் பொருட்டே. சர்ப்பு சுகம் மட்டுமே வாழ்க்கை யில்லை. தொடர்புச் சங்கிலி தோற்றுவிக்காத சுகம், சத்தில்லாத உணவு.

நானும் இந்தக் கூடலைப் பார்த்துவிட்டுக் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறேன். இது வெட்கத்தினால் அல்ல. இவ்விஷயத்தின் நுனி வேர் தேடி உட்கார்ந்திருக்கிறேன். ஒருவேளை வைரமுத்து எழுதினதும் இதைத்தானோ? இந்த இயற்கையின் பிரமிப்பு தாங்காமல்தானோ? வைரமுத்து கண்கள் மூடும் என்று சொன்னது பிரமிப்பா வெட்கமா தெரியவில்லை. நான் அதை வெட்கம் என்று எப்படி அர்த்தப்படுத்திக் கொண்டேன். விஸ்வநாதனும் அதனை வெட்கம் என்றுதான் அறிவித்தான். என்னை அப்பாட்டில் இணைத்துக் கொள்வதாய்ச் சொன்னான்.

இப்படி ஒரு காட்சியைப் பார்த்தேனென்று விஸ்வநாதனிடம் சொன்னால் என்ன செய்வான்? என்னைக் கூடப் பார்க்க முடியாமல் கண்களை மூடிக்கொள்வானா?

ச்சே.... முட்டாள் என்பது கடுமையான வார்த்தை. விஸ்வநாதன் முட்டாளாய் இருப்பதில் எனக்கு எந்த விதக் கோபமும் இல்லை. எனக்கு உதவி செய்பவனுக்கு நான் உதவி செய்ய வேண்டுமே தவிர எட்டி உதைப்பதில் அர்த்தமும் இல்லை.

விஸ்வநாதனிடம் அந்தப் பாட்டு சரி என்று சொல்லிவிடலாமா? கண்களை மூடுவது பிரமிப்பினால் என்று அர்த்தம் காட்டலாமா? இதுமன்னிப்புக் கேட்பது மாதிரி படுமோ? மன்னிப்புக் கேட்பதாய்ப் பட்டால் இன்னும் துக்கம் விளையுமோ?

சென்ட்ரல் வந்ததை அவனுக்குச் சொல்லியிருக்க வேண்டும். சொல்லாமல் தாண்டிப் போன பிறகு அறிவித்தது தண்டிப்பது போல் மாறிவிட்டது. இலக்கியப் பேச்சு குரூரமாய்ப் போய் விட்டது. ஸ்நேகம் வளர்க்காத பேச்சு பிள்ளை பெறாத கூடல் போல. கூடல் மாதிரி குரூரமும் ஒரு சுகம், வெற்று சுகம், வளர்ச்சி யில்லாத சுகம்.

நான் விஸ்வநாதனிடம் நேரடியாய் விளக்கி மன்னிப்புக் கேட்டே ஆக வேண்டும்.

எட்டி மறுபடி கௌசல்யாவைப் பார்க்கலாமா? வேண்டாம். அந்த சந்தோஷத்தை என் பார்வை குலைத்துவிட வேண்டாம்.

காதல் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன் என்று பாடியது இந்த மாதிரி சந்தோஷம். இந்த சந்தோஷம் கடவுள் விஷயம். கடவுளைக் கண்ட சந்தோஷம்.

காயத்ரி விருட்டென்று எழுந்தாள். முகம் கழுவித் திலகமிட்டுக் கொண்டாள். தட்டில் சாதம் கவிழ்த்து மோர் ஊற்றிக் கொண்டாள். இது விஸ்வநாதன் சாப்பிடுகிற நேரமா என்று நினைத்துக் கொண்டாள்.

"அடேடே... யார் உங்களை நெனைச்சுக்கறா." தாரிணி விஸ்வநாதன் தலையில் தட்டினாள்.

"தப்பா முழுங்கிட்டேன்."

"எங்கேயோ யோசனை. சாப்பிடறபோது தட்டுலே நினைவு வச்சுச் சாப்பிட்டாத் தானே ஒட்டும்."

(தொடரும்)

# நீங்கள் கேட்டவை


காந்தி


கபில்

○ த. சத்தியநாராயணன், அவன்புரம்
? நீங்கள் மனைவிக்குப் பயந்தவரா?
! வாரியார் கதை ஒரு நாள் கேட்கப் போயிருந்தேன். அவர் வேடிக்கையாகச் சொன்னார்: ''உன் வீடு என்ன மதுரையா?'' என்று கேட்டால் மனைவியின் ஆதிக்கமாம்; ''சிதம்பரமா?'' என்று கேட்டால் புருஷன் ஆதிக்கமாம்; ''திருச்செங்கோடா?'' என்று கேட்டால் புருஷன் மனைவி இருவரும் சம அந்தஸ்து உள்ளவர்களாம்! (திருச்செங்கோடு அர்த்த நாரி பிரசித்தம்.) என் வீட்டைத் திருச்செங்கோடு என்று சொல்லிக்கொள்ள என் மனைவி பர்மிஷன் கிடைத்து விட்டது!

தமாஷ் ஒரு புறமிருக்க, இதைச் சங்கேத மொழி என்று குறிப்பிட்ட வாரியார்,

''மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்போர்க்கு தேங்காய்ப் பால் ஏதுக்கடி'' என்ற பாடலில் உள்ளுறையும் சிறப்புக்களை விண்டு கூறி மகிழ்வித்தார்.

ஆண்டு தோறும் இப்படி பல்வேறு அறிஞர்களின் உபந்நியாசங்கள், பாட்டுக் கச்சேரிகள் முதலானவற்றுடன் 16 நாள் 18 நாள் என்று சங்கர ஜயந்தி மகோத்சவத்தைச் சிறப்பாகக்கொண்டாடித் தனிமனிதராக நிர்வகித்து சென்னை கோடம்பாக்கத்தைச் சேர்ந்த மக்களுக்குப் பெருந்தொண்டாற்றி வருகிறார் ஜி. பி. ஹரன்.

○ ஆர். பி. மனோபாலு, கரூர்
? சமீபத்தில் பார்த்த உங்கள் மனத்தைத் தொட்ட ஆங்கிலப் படம் ஏதாவது உண்டா?
! மறுபடியும் ''காந்தி''.

○ ஜி. பாரதி, காங்கயம்
? இளம் வயதில் உலகப் புகழ் பெற்று விட்ட கபில்தேவ் பற்றி...
! இந்திய அணிக்குத் தலைமை ஏற்றுக் கிரிக்கெட்டில் இந்த இளம் வயதில் அவர் புரிந்துள்ள சாதனையை விட அதிக வியப்பளிப்பது இந்த இளம் வயதிலேயே அவருக்குள்ள மன முதிர்ச்சி. பம்பாயில் வந்திறங்கியதும் விசிறிகள் ''கபில் தேவ் ஜிந்தாபாத்'' என்று வாழ்த்தொலி எழுப்ப அவரோ அவர்களைத் திருத்தி ''பாரத் ஜிந்தாபாத்'' என்றுகோஷமிடச் செய்தார். இதன் மூலம் அவரது அடக்கம், டீம் ஸ்பிரிட், தேச பக்தி, ஒருமைப்பாடு உணர்வு ஆகிய அனைத்தையும் வெளிப் படுத்தி யிருக்கிறார்.

○ வாசகி, கெங்கவல்லி
? விம்பிள்டன் டென்னிஸ் போட்டிகள் ஒவ்வொன்றிலும் முடிவுகள் எதிர்பாராதனவாய் இருக்கின்றனவே?
! இருந்து என்ன பிரயோஜனம்: ஃபைனல்ஸில் எல்லாம் எதிர்பார்த்த படியே நடந்து 'சப்' பென்று போய் விட்டதே.

○ எஸ். ரவிந்திரன், கடலூர்
? தமிழக புதிய மந்திரிகளில் மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்த நபரைக் காணோம்?
! அரசுக்கு மேம்பட்ட ஒரு சூப்பர் அதிகார கேந்திரத்தை நிர்வகிப்பவருக்குக்கேவலம் அமைச்சரவையில் ஓரிடம் தேவையில்லையே.

○ எஸ். வில்சன், நாகர்கோவில்
? இன்பத்தைக் கண்டு சிரிக்கும் மனிதன் ஏன் துன்பத்திற்கு மட்டும் அழுகிறான்?
! அப்படி யொன்று மில்லையே; நீங்கள் வேணுமானால் பாருங்கள், ஹோட்டல் பண்டங்கள் எல்லாம் மறுபடி விலை ஏறிவிட்டன; (காப்பி 70 பைசா போண்டா பஜ்ஜிரூ. 1-30) என்றாலும் பத்திரிகைக்கு அதன்வாசகர்கள்ஹோட்டல் ஜோக் எழுதி அனுப்புவது அதிகரிக்கப் போகிறதேயொழியக் குறையாது! நம் மக்கள் 36 ஆண்டுகளில் துன்பத்துக்கு நன்கு பழகிவிட்டார்கள்.

○ ஆர். ஏ. கணேசன், ★ உதயநத்தம்
? ஜாதிகள் ஒழிக்கப்பட வேண்டும் என்று கூறிக் கொண்டு அமைச்சர் பதவிகளையே ஜாதி அடிப்படையில் தந்துள்ள எம். ஜி. ஆர். பற்றி?
! இதில் எம். ஜி. ஆரை மட்டும் இடித்துக் காட்டுவானேன்? நமது அரசியல்வாதிகள் ஜாதியை ஒழிப்பது தெருப் பெயர்களில்மட்டும்தான். பதவி ஆசையும் அதிகார மோகமும் வோட்டு வேட்டையும் இணைந்த சுயநல அரசியல் இவர்களை வேறு

விதமாகச் செயல் பட விடாது.

○ எஸ். வெங்கடேசன், கும்பகோணம்

? தினமலர், தினமணி இவற்றுடன் தரப்படும் இலவச இணைப்புகள் பற்றி உங்கள் பதிலைப் படித்தேன். 50 காசுக்கு நாளிதழுடன் புத்தகமும் வழங்க அவர்களுக்குக் கட்டுப்படியாகுமா?

! ஆகாது. 50 காசுக்கு இரண்டும் வழங்கும்படி நான் கூறவும் இல்லை. 'இலவசம்' என்ற சொல்லுக்குத்தான் ஆட்சேபம் தெரிவித்தேன். அதன் நியாயத்தை உணர்ந்து கஸ்தூரி ரங்கன் இலவசம் என்ற சொல் நீக்கப்படும் என்று கடிதம் எழுதியுள்ளார். அவர் பெருந் தன்மையைப் பாராட்டுகிறேன்.

○ கே. பாலசுப்பிரமணியம், கோவை

ஞாநி



? வண்ண மயில் பத்திரிகையில் கல்கி, ராஜாஜி பற்றி எழுதியிருப்பது பற்றி உங்கள் கருத்து?

! கௌதமன் கருத்தை நான் மதிக்க வில்லை. ஆனால் தம் கருத்தை வெளியிட அவருக்குள்ள உரிமையை மதிக்கிறேன்.

○ வ. பொன்னம்பலம், வளவனூர்

? ஓராண்டு நிறைந்துள்ள சத்துணவுக் குழந்தையின் நிறை குறைகளை ஆராயவும்.

! சோம்பேறித் தனத்தை வளர்க்கும், உணவு உடை எல்லாம் அரசாங்கமே தந்து உதவ வேண்டும் என்ற மனப்பான்மையை ஊட்டும்; பெற்றோருக்குப் பிள்ளைகளிடம் பொறுப்பில்லாமல் போகும்; அரசாங்கத்துக்கு வேறு எந்த இனத்திலும் செலவழிக்கப் பணம் இல்லாமல் தட்டுப்பாடு ஏற்படும் போன்ற குறைகளை விடவும், புரதச் சத்து குழந்தைகளுடைய உடல், மன ஆரோக்கியங்களைக் காத்து அறிவு வளர்ச்சிக்கு உதவி, நல்ல எதிர்காலப் பிரஜைகளை உருவாக்கும் என்ற நிறை முக்கியமானது. இந்த வரட்சி ஆண்டில் சத்துணவுத் திட்டம்மட்டும் இல்லாதிருந்தால் தமிழகம் பல பட்டினிச் சாவுகளைக் கண்டிருக்கும்.

○ எம். மாரிமுத்து ஈரோடு

? இந்தியா போய்க் கொண்டிருக்கும் நிலையில் கி.பி. 2000ல் எப்படி இருக்கும்?

! அப்போதுகூட பாதாளச் சாக்கடை அடைப்புக்களை நீக்க இயந்திரம் தருவிக்காமல் மனிதர்



மக்கன்ரோ

களை இறக்கி கும்பியில் குளிக்கச் செய்து இழிவு படுத்திக் கொண்டிருப்போம். அவர்களில் சிலர் விஷ வாயுவால் இறந்து போனது பற்றி அவ்வப்போது பத்திரிகையில் படித்து ''ஐயோபாவம்!'' என்று அனுதாபப் பட்டுக் கொண்டிருப்போம்.

○ ஆர். இளங்கோ, ஏந்தல்

? சாராய மொத்த விநியோகத்தைத் தமிழக அரசு ஏற்றுள்ளதே?

! சில்லறையாக மட்டுமின்றி மொத்தமாகவும் அரசு. மக்களின் செல்வத்தையும் ஆரோக்கியத்தையும் பறிப்பதாக அர்த்தம். கவனியுங்கள், சாராய புட்டிக்கு முரசொலியில் கருணாநிதி காட்டும் கணக்கு: அரசு நிர்ணயித்தபடி எரிசாராயம் 85 பை, காலி பாட்டில் ரூ. 2, பாட்டில் மூடி 25 காசு, லேபிள் 5 காசு, பேக்கிங் 17 காசு போக்கு வரத்து 30 காசு, சேதாரம் நாலு காசு, இலாபம் 29 காசு. ஆக மொத்தம் ரூ. 3.95. ஆனால் விற்கப்படுவதோ ரூ. 7.41. வித்தியாசமான ரூ. 3.46 அரசுக்கு 'குடி' மகன் செலுத்தும் வரி அல்லது மதுவிலக்கு ரத்து செய்ததால் அரசு அடிக்கும் கொள்ளை என்று எப்படி வேணுமானாலும் சொல்லலாம். மக்கள் உடல் ஆரோக்கியமும் இழக்கிறார்கள்; கஷ்டப் பட்டுச் சம்பாதித்த பணத்தையும் இழக்கிறார்கள். இரட்டிப்பு நஷ்டம். இதில்காலி

கஸ்தூரிரங்கன்



புட்டிக்கு ரூ. 2 வசூலிப்பது எப்பேர்ப்பட்ட அநீதி என்றும் கருணாநிதி சுட்டிக் காட்டுகிறார். ஒவ்வொரு முறையும் சாராயம் புதிய பாட்டிலிலா அடைக்கப்படுகிறது? இதில் ஊழலுக்கு எவ்வளவு இடமிருக்கிறது! இப்படி தராசு எழுதியதுமே அன்று கலைஞர் மதுவிலக்கை ரத்துசெய்ய வில்லையா என்று கேட்காதீர்கள். அதை நாம் மன்னிக்கவில்லை மறக்கவுமில்லை.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்: டாக்டர் ஆர்.ஏ. கணேசன், உதயமார்த்தாண்டபுரம் போஸ்ட் கோடாலி கருப்பூர் வழி 612902

# வேலைப்பாடுகள் மிகுந்த காதி கிராப்ட் தோல் பொருள்கள்.

மிக நேர்த்தியான டிசைன்களில், கைவேலைப்பாடுகள் நிறைந்த தோல் பொருள்கள் காதி கிராப்டில் தயாரிக்கப்படுகின்றன. அவைகள் நீண்ட காலமாய் நயமான தயாரிப்பிற்குப் பெயர் பெற்றவை. தரமான காலணிகள், அழகுமிகு கைப்பைகள், கைப்பெட்டிகள், பர்சுகள் முதலிய பலவகையான தோல் பொருள்கள் உங்கள் தேவைக்கேற்றவாறு கிடைக்கின்றன.



கிடைக்குமிடம் :

*Khadi Kraft*



**தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்**

குறளகம், சென்னை 600 108

ARIES DIPR 509 83 TAM B

[திருச்செந்தூர் குடமுழுக்கு விழாவில், மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ அருணகிரி சுவாமி அவர்களுக்கும் அறநிலையத்துறை அமைச்சர் திரு. வீரப்பன் அவர்களுக்கும் ஏற்பட்ட மோதலைத் தொடர்ந்து, மடாதிபதி அவர்களை நமது நிருபர் சந்தித்தபோது...]

# "எதற்கும் கலங்க மாட்டேன்..!"

வார்த்தைக்கு வார்த்தை மடாதிபதிகள் பதில் சொல்லியாக வேண்டும்' என்று சொன்னதால்தான்

"1981ல் பிறப்பிக்கப் பட்ட 64ம் எண் அரசாணையை எதிர்த்த முதல் மடாதிபதி நான் தான்."





வீரப்பன் அவர்களுக்கு மேடையிலேயே பதில் கூற வேண்டியதாயிற்று. அந்தப் பதிலைக் கேட்கப் பொறுமை இல்லாமல் ஓட்டம் பிடித்த அமைச்சர் அறநிலையத்துறை அமைச்சராக இருக்க லாயக்கற்றவர். காலத்திற்கு ஏற்ற படி ஆதீன கர்த்தர்கள் மக்களுடன் கலந்து உறவாடுவது அரசியல் வாதிகளுக்குப் பயத்தைத் தோற்றுவித்து இருக்கிறது. மீனாட்சிபுரம், மண்டைக்காடு போன்ற பகுதிகளில் நான் சென்று சம்பந்தப்பட்ட தரப்பினரை அமைதியாக இருக்க என்னால் இயன்ற அளவு உதவி வருகிறேன். இந்து சமய மகாநாடுகளில் கலந்து கொண்டு உரையாடுகிறேன். மக்களிடையே சென்று மடாதிபதிகள் தொண்டு புரிவது காலத்தின் கட்டாயம்; அதைப் புரிந்து கொள்ள முடியாமல் 'ஏதோ இடரென்று எனக்கு மடாதிபதி பதவி வந்து விட்டது போலவும், நான் அரசியலுக்குப் போக விரும்புவதாகவும் அமைச்சர் கூறுவது விந்தை. சென்னை நகரில் ஐந்தாண்டு காலம் அங்கீகரிக்கப்பட்ட பத்திரிகையாளனாகப் பணியாற்றிய பின், தத்துவத்தில் எம். ஏ. தேர்ச்சி பெற்று, பிறகு சைவ சித்தாந்தங்களை ஐந்து வருடங்கள் கரைத்துக் குடித்த பின் என் குருநாதரால் நியமிக்கப்பட்டவன் நான். சினிமா டிக்கெட் கிழித்துக் கொண்டிருந்தவர் மந்திரியாக இருக்கும்போது நான் ஏன் மடாதிபதியாக இருக்கக் கூடாது? அறநிலையத் துறை அமைச்சராக இருப்பவர் எல்லா மடாதிபதிகளையும் கலந்து ஆலோசித்து, பிறகு இந்து மதத்துக்கு, மதத்தின் வளர்ச்சிக்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்ய வேண்டும். அதை விட்டு, நாலாந்தரப் பேச்சாளர் போல் மேடையில் பேசினால் மரியாதை போய்விடும். இவருக்கு என் மேல் என்ன கோபமோ தெரிய வில்லை.

"பதில் சொல்லியாக வேண்டும் என்றவர் பதிலைக் கேட்காமல் ஓடுவானேன்?"



"எதற்கும் கலங்க மாட்டேன்."



1981ல் பிறப்பிக்கப்பட்ட 64ம் எண்ணுள்ள அரசாணையின்படி, மடாதிபதிகள்மேல் புகார் வந்து அது உண்மை என்று தெரிந்தால் நீக்கும் அதிகாரமும், பிறகு வாரிசுகளை நியமிக்கும் விஷயத்தில் அரசைக்கலந்து ஆலோசிக்கவேண்டும்என்றும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இந்த அரசாணையை வேகமாக எதிர்த்த முதல் மடாதிபதி நான்தான். இது ஆதீனகர்த்தர்களின் சுதந்திரத்தில் தலையிடுவதாக இருக்கிறது என்று கூறி, இதை எதிர்த்தேன். இப்போது இது பற்றி முடிவு எடுக்க ஒரு உயர் மட்டக் குழு என்றுபோட்டிருக்கிறார்கள். இந்த அரசாணையை எதிர்த்ததனால் எனக்கு ஏற்பட்ட சோதனைகள் ஏராளம். 1980ல் என் குருநாதர் பரிபூரணம் அடைந்த பிறகு ஏற்பட்ட செலவை இன்னும் அறநிலையத் துறை அங்கீகாரம் செய்யவில்லை. கனரா பாங்கில் உள்ள எங்கள் மடத்தின் கணக்குகளை நான் நிர்வகிக்க முடியாமல் தடை விதித்திருக்கிறார்கள். இன்னும் ஏராளமான தடைகள். ஆனால் இதையெல்லாம் செய்து எங்களை விலைக்கு வாங்க முடியாது. திருஞான சம்பந்தர் ஸ்தாபித்த இந்த மடத்தின் வாரிசு நான். எதற்கும் கலங்க மாட்டேன். கடவுள் இல்லை என்று கூறும் கும்பல் கூட்டும் கூட்டத்திலும், குடமுழுக்கு விழாவிலும் பேசித் திரியும் இரட்டை வேடதாரிகள் தங்களைத் திருத்திக் கொள்ள வேண்டும். இல்லையேல் மக்கள் திருத்துவார்கள். அறநிலையத்துறை அமைச்சர் என்று கூறிக்கொண்டு நெற்றியில் சமயக் குறிகள் எதுவும் அணியாமல் ஆலயத்திற்குள் நுழைவதைத் தடுக்க வேண்டும். வார்த்தைக்கு வார்த்தை பதில் சொல்லியாக வேண்டும் என்று சொன்னவர்கள் பதிலைக் கேட்கப் பொறுமை இல்லாமல், வன்முறையில் ஈடுபட்டு, மடத்தின் மீது சோடா பாட்டில்களையும் பால் பாட்டில்களையும் எறிந்திருக்கிறார்கள்.

[காரசாரமாகப் பேசி வந்த மடாதிபதி, தமாஷாக, ஞானப்பால் குடித்து வளர்ந்த திருஞான சம்பந்தரால் ஸ்தாபிக்கப் பட்ட மடம் என்பதால் பால் புட்டிகளை வீசியிருப்பார்களோ' என்றார்.]

வன்முறையில் ஈடுபட்டவர்கள் யார் என்று போலீஸுக்குத் தெரியும். ஆனால் கைது செய்யாமல் தள்ளிப் போட்டுக்கொண்டே போகிறார்கள். இதற்கெல்லாம் ஒரு முடிவு வராமலா போய் விடும்.... முருகா...

[இந்தச் சமயத்தில் சென்னையிலிருந்து தொலைபேசி தொடர்பு வருகிறது. பேசி முடித்த பிறகு சற்று நிதானித்து, ''அடுத்து வரும் அறநிலையத் துறை அமைச்சராவது மடாதிபதிகளைப் புரிந்து கொள்பவராக இருக்கட்டும்'' என்கிறார்.]

படங்கள்: மனோ

# சரிதா படைத்த வரலாறு



நடிகை சரிதாவின் வழக்கு அவர் ஒரு நடிகையென்பதால் சமீப காலமாகப் பத்திரிகைகளில் பரபரப்பாக அடிபட்டுக்கொண்டிருந்தது. பாலசந்தரின் மூலம் அறிமுகப் படுத்தப் பட்டு, குமாரி சரிதாவாகப் பிரபலமாகி வர, திடீரென்று அவர் திருமணமானவர் என ஒரு பத்திரிகை பிரசுரித்தது. சரிதா முதலில் மறுக்க, பிறகு பத்திரிகைகள் திருமணப் புகைப் படத்தினைப் பிரசுரித்து ஆதாரத்துடன் நிரூபிக்க, கடைசியில் சரிதா கோர்ட்டிற்குப் போக வேண்டியதாயிற்று.

காரணம் அவருடைய கணவர் என்று சொல்லிக் கொள்ளும் திரு வேங்கடசுப்பையா தன்னுடைய மனைவி மீண்டும் தன்னுடன் வந்து வாழ வேண்டும் என்று கோரி ஆந்திராவில் உள்ள கடப்பை சப்-கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். இதை ஒட்டி ஜூலை 1ந் தேதி ஆந்திர ஹைகோர்ட் அளித்துள்ள தீர்ப்பு நீதி மன்ற வரலாற்றிலேயே ஒரு பெரிய திருப்பு முனையை ஏற்படுத்தியுள்ளது. இதுநாள் வரை நடிகையின் வழக்கு என்றிருந்தது போய், இப்போது விவரம் தெரிந்தவர்களும், வழக்கறிஞர்களும் பரபரப்பாகப் பேசக் கூடிய அளவுக்கு அந்தத் தீர்ப்பு பிரபலமாகி விட்டிருக்கிறது.

அது என்ன அப்படிப்பட்ட தீர்ப்பு?

நம்முடைய சட்டங்கள் பிரிட்டிஷார் நம்மை ஆண்ட போது இயற்றப்பட்டு நீதி மன்றங்களில் நடைமுறைப்படுத்தப் பட்டு வந்தன. பாரதம் விடுதலையான பிறகு, நம்முடைய கலாசார, பண்பாடுகளுக்கேற்ப, பல திருத்தங்களைக் கொண்டு வர வேண்டியதாயிற்று. இதனால் ஒவ்வொரு கால கட்டத்திலும் ஒவ்வொரு சட்டமாக பார்லிமெண்ட் நிறைவேற்றியது. இந்து திருமணங்களைப் பொறுத்த வரை, இந்து கலாசார, பழக்க வழக்கங்களை அடிப்படையாகக் கொண்டு, 1956 ஆம் ஆண்டு 'இந்து திருமணச் சட்டம்' பாராளு மன்றத்தில் நிறைவேற்றப் பட்டது.

இந்தச் சட்டத்தின் ஒன்பதாவது பிரிவுதான் ஆந்திரா ஹைகோர்ட்டால் இப்பொழுது செல்லாது என்று தீர்ப்பளிக்கப் பட்டுள்ளது. திருமணம் செய்துகொண்ட கணவனோ அல்லது மனைவியோ மற்றவரை விட்டுப் பிரிந்து வாழ நேரிடலாம். அந்த மாதிரி சமயங்களில் பிரிந்து சென்ற கணவன் அல்லது மனைவி தன்னுடன் வந்து வாழவேண்டும் என்று கோர்ட் மூலமாக உரிமையை நாடுவதையே இந்த ஒன்பதாவது பிரிவு கூறுகிறது.

இதை அடிப்படையாக வைத்து சரிதாவின் கணவர் என்று கூறிக் கொள்ளும் வேங்கடசுப்பையா கடப்பை

---

ஸ்டெனோ: என் கொண்டை அலங்காரம் பெஸ்ட் இல்லையா?

எம். டி.: ஆமாம்.

ஸ்டெனோ: நான் வச்சிருக்கிற பொட்டு ப்ளவுஸோட மாட்ச் ஆகிறது இல்லையா?

எம். டி.: ம்....ம்.

ஸ்டெனோ: என் புடவை காஷ்மீர் ப்யூட்டி மாதிரி காட்டலே?

எம். டி.: நிச்சயமாய்.

ஸ்டெனோ: என் நடை கூட ஸ்ரீதேவி நடை மாதிரி இல்லையா?

எம்.டி.: ஆமாம். ஆமாம்.

ஸ்டெனோ: போங்க ஸார்! நீங்க ஆனாலும் ரொம்பத்தான் என்னை வர்ணிக்கிறீங்க. எனக்கு வெட்கமாக இருக்கு.

—ந. க. பரமசிவம்.



சப் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். ஆனால் சரிதாவிற்கும் வேங்கட சுப்பையாவுக்கும் திருமணம் திருப்பதியில் நடந்தது. சிறிது காலம் சென்னையில் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள். அப்படி இருக்கும்போது கடப்பை சப் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தது செல்லாது என்று சரிதா ஆட்சேபம் தெரிவித்து, ஆந்திர ஹைகோர்ட்டிற்கு அப்பீல் செய்துகொண்டார். ஆந்திர ஹைகோர்ட்டில் சரிதாவுக்குச் சாதகமான தீர்ப்பு வழங்கப்பட்டது.

இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் என்பது இந்தியக் குடி மக்களுக்காக இயற்றப்பட்ட சட்டம். இதில் பதினான்காவது பிரிவு 'இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு குடிமகனும் சட்டத்தின்முன் சமமானவனே; இங்கு ஒருவருக் கொருவர் தாழ்ந்தவரோ அல்லது உயர்ந்தவரோ இல்லை' என்று கூறியுள்ளது. அதே போல் இருபத்திஒராவது பிரிவு.'இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு குடிமகனுக்கும் பாதுகாப்பான வாழ்க்கை, சுய கௌரவம், தனித்துவத்துடன் வாழும் உரிமை உண்டு'' என்று கூறுகிறது.

இந்த 14வது மற்றும் 21வது பிரிவுப்படி பார்க்கும்போது இந்து திருமணச் சட்டத்தின் ஒன்பதாவது பிரிவு அடிபட்டுப் போகிறது என்று கூறுகிறது ஆந்திர ஹைகோர்ட்.

ஒவ்வொரு குடி மகனுக்கும் சுய கௌரவம், தனித்துவத்துடன் வாழும் உரிமையை அரசியல் சட்டம் அளித்திருக்கும்போது கணவனுடன் வாழ விரும்பாமல் பிரிந்து சென்ற மனைவியைக் கணவனுடன் போய் வாழ வேண்டும் என்று கட்டாயப் படுத்த இந்து திருமணச் சட்டத்துக்கு உரிமை கிடையாது என்பதே அர்த்தமாகிறது.

மேலும் ஒரு விஷயத்தை நீதிபதி சௌத்ரி தெளிவுபடுத்தியுள்ளார். செக்ஸ் எனப்படும் உடலுறவு என்பது மனித இனத்தில் மட்டுமே பரஸ்பரம் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு, ஒருவருக் கொருவர் நம்பிக்கை கொண்டு ஈடுபடுவதாக உள்ளது. இந்த ஒன்றின் அடிப்படையில்தான் மனித இனமும் மிருக இனமும் வேறு படுகிறது. ஆனால் இந்துத் திருமணச் சட்டத்தின் ஒன்பதாவது பிரிவுப்படி, செக்ஸூம் கட்டாயத்துக்கு உள்ளாக்கப் படுகிறது. இது முழுமையாக அரசியல் சட்டத்துக்கு முரணாகிறது. அப்பொழுது சட்டத்தின் முன் எல்லோரும் சமம் என்று கூறுவது பொய்யாகிப் போகிறதே! மனைவி மிருக நிலைக்குத் தள்ளப்படுகிறாள், அவளுக்குப் பாதுகாப்பற்ற, கண்ணியமில்லாத வாழ்க்கை யல்லவா அமைந்து விடுகிறது?

இவற்றை யெல்லாம் விளக்கிய சௌத்ரி, கணவனோ, அல்லது மனைவியோ ஒருவர் மற்றவரைக் கட்டாயமாகத் தன்னுடன் வாழ வேண்டும் என்று சட்டத்தின் மூலம் நாடுவது செல்லாது என்று 1970-ல் பிரிட்டனிலும் ஒரு தீர்ப்பாகியுள்ளதென்று எடுத்துக் காட்டி இந்து திருமணச் சட்டத்தின் ஒன்பதாவது பிரிவு செல்லாது என்று தீர்ப்புக் கூறியிருக்கிறார்.

இந்த வழக்கின் தீர்ப்பைப் பொறுத்த வரையில் 'பெண்மையின் வெற்றி' என்று கூறலாம். விரும்பாத ஒரு பெண்ணை இனி எந்தக் கணவனும் பலவந்தப் படுத்த முடியாது. பெண்மையின் கௌரவத்திற்கும், பாதுகாப்பான வாழ்க்கைக்கும் சுயமான சிந்தனைகளுக்கும் மதிப்புக் கொடுத்து எழுதப்பட்ட அற்புதமான தீர்ப்பு.

ஆனால் எந்த நாணயத்துக்கும் மறு பக்கம் உண்டு என்று எச்சரிக்கிறார்கள் சில வழக்கறிஞர்கள். ஏதோ காரணத்திற்காகக் கோபித்துக் கொண்டு அம்மா வீட்டிற்கு வந்துவிடும் பெண்ணை தாய் வீட்டார் புத்திமதி சொல்லி, 'குடும்பம் என்று இருந்தால் நாலும்தான் இருக்கும், நீயும் கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்துகொண்டு போ' என்று சமாதானம் செய்து அனுப்புவார்கள். இனி அந்தப் பெண் 'என்னை யாரும் கட்டுப்படுத்த முடியாது' என்று பிடிவாதம் செய்யலாம். இந்து திருமணங்கள் வியாபார ஒப்பந்தம் அல்ல. ஒரு புனிதச் சடங்காகவும், கணவன் மனைவி உறவு மிகப் புனிதமாகவும் கருதப்படுகிறது. இல்வாழ்க்கை மேடு பள்ளங்கள் நிரம்பியதாய்த்தான் இருக்கும். சமாளித்து, ஒற்றுமையுடன் வாழ்ந்து காட்டுவதுதான் புனிதமான இல்லறம் என்று இந்து திருமணங்கள் காலம் காலமாக அறிவுறுத்தி வருகின்றன. அப்படி இருக்கும் போது யாரும் யாரையும் கட்டுப்படுத்த உரிமை இடையாது என்று கூறுவதால், மேல் நாட்டு நாகரிகங்கள் எற்கனவே புகுந்து வரும் நேரத்தில், இது அந்தப் போக்கை மேலும் துரிதப் படுத்துமோ என்று புல வழக்கறிஞர்கள் பேசிக்கொள்கிறார்கள்.

எப்படியோ, சரிதா திரைப் படங்களில் மட்டுமின்றி நீதி மன்றத்திலும் வரலாறு படைத்து விட்டார்.

-டி. ஆர். ரமேஷ்



''உங்க சொற்பொழிவுக்கு இவ்வளவு பெரிய கூட்டத்தை எப்படிக் கூட்டினீங்க?''

''சும்மா பண முடிப்பு வழங்கப் போறதா ஒரு நோட்டீஸ் விட்டேன். எனக்குக் கடன் கொடுத்திருந்த எல்லோரும் வந்திட்டாங்க.''

—சேலை அ. கதிர்வேல்

# ராத்திரி ராகம்

அவன் விலாசம் தெரியாத வேதனையில் இருப்பவள். நிலா அழும் தேய்பிறை இரவுகளில்... மொட்டை மாடியில்... தினமும் அவளுக்காக ஒரு புல்லாங்குழல் எங்கிருந்தோ புலம்புவது கேட்கிறது. ஓ! அந்த ராத்திரி ராகம்...

எவனோ ஒருவன்
வாசிக்கிறான்
நான்
இருட்டில் இருந்து
யாசிக்கிறேன்.
தவங்கள் புரிந்து
யோசிக்கிறேன்
அதைத்

தவணை முறையில்
நேசிக்கிறேன்.
கேட்டுக் கேட்டுக்
கிறங்குகிறேன்
நான்
கேட்பதை அவனோ

அறியவில்லை
காட்டு மூங்கிலின்
காதுக்குள்ளே
அவன்
ஊதும் ரகசியம்
புரியவில்லை.

இதயம் கனக்கும்
இரவுகளில்
அந்த
இங்கித ராகம்
தேன் வார்க்கும்
புதிய ராகத்தில்
புல்லரித்து
அந்தப்
புல்லாங்குழலே
பூப்பூக்கும்

கானம் கேட்கும்
பொழுதுகளில்
என்
கண்கள் அழுவதை
அறியவில்லை
ஏனோ கண்ணீர்
கசிகிறது
இது
எந்த ஜாதியோ
தெரியவில்லை.

உறக்கம் இல்லா
முன்னிரவில்
என்
உள் மனத்தில் ஒரு
மாறுதலா?
இரக்கம் இல்லா
இரவுகளில்
இது
எவனோ அனுப்பும்
ஆறுதலா?

ஏகாந்தத்தின்
இனிமையிலே
என்
இமையே மெல்ல
இறங்கிவிடு
மோகக் குழலில்
ஊறிவரும்
இசை
முடியும்போது
உறங்கிவிடு.

**வைரமுத்து பக்கம்**



"மண வாழ்க்கையில் ஆண்களின் பங்குன்னு நீ கொடுத்த புத்தகம்...."

"ஒரே அசிங்கமா இருக்கா?"

"சீ, சீ! வெறும் சமையல் புத்தகண்டா!"

—நெல்லை. சுவாதி



"டாக்டர், என் உடம்பிலே என்னவோ கோளாறு. நன்றாக 'செக்-அப்' பண்ணிப் பாருங்க!"

"ஏன்? என்ன செய்யுது?"

"ஆபீசில் சரிவரத் தூக்கமே வர மாட்டேங்குது!"

—பி. கே. சங்கர்



ஒருவர்: சிலுக்குக்கு கண், உதடு, மார்பு இவை மட்டும் சிறப்பாக அமையாவிட்டால் அப்புறம் என்ன இருக்கும்?

மற்றவர்: (பெருமூச்சுடன்): என் மனைவி.

-ந. க. பரிமளம்



# அமர்நாத்

● ஒரு ரஞ்சி டிராஃபி இறுதி ஆட்டத்தில் தமது அணிக்குத் தலைமை தாங்கிய மொஹீந்தர் அமர்நாத், 705 ரன்களை எடுத்திருந்த கர்நாடகாவை முறியடித்து நம்ப முடியாத சாதனை புரிந்தார். அந்த ஆட்டத்தில் அவர் எடுத்த ரன்கள் 185. மேற்கிந்திய அணிக்கு எதிராக 76-77ல் டிரினிடாட் டெஸ்ட்டில் அவர் 85 ரன்கள் எடுத்து வெற்றிக்கு வகை செய்தது இன்றைக்கும் கிரிக்கெட் வட்டாரத்தில் பேசப்படுகிறது. என்றாலும் 32 வயதான மொஹீந்தர், கபில்தேவ் போலல்லாது, இன்றைய உன்னத நிலையை அடைய ஒவ்வொரு கால கட்டத்திலும் போராட வேண்டியிருந்தது.

1969ல் ஓபனிங் போலராக சென்னை டெஸ்டில் அறிமுகமான 18 வயது வாலிபர், சாப்பல்லையும் ஸ்டாக்போலையும் அவுட்டாக்கி அனைவரையும் வியப்பில் ஆழ்த்தினார். ஆயினும் என்ன? ஏனோ பின்னுக்குத் தள்ளப்பட்டார். மறுபடி அவர் டெஸ்ட் வாய்ப்புப் பெற்றது 1975ல்தான். அந்த ஆண்டு மேற்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று ஆடிய போது ஆளைப் பார்த்து வீசப்படும் வேகப் பந்துகளுக்கு அஞ்சாமல் இயங்கியவர் இவர் ஒருவரே. கிங்ஸ்டனில் 5 விக்கெட் நஷ்டத்துக்கு 97 ரன்கள் எடுக்கப்பட்டிருந்த நிலையில் (அன்று ஐந்து இந்திய பாட்ஸ்மென்கள் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர்.) பேடி அநாகரிகப் பந்து வீச்சுக்கு ஆட்சேபணை தெரிவித்து டிக்ளேர் செய்தார். அந்த 97ல் அமர்நாத் எடுத்தவை 61. ஹோல்டிங்கின் இரு பயங்கரப் பந்து வீச்சுக்களை சிக்ஸராக மாற்றியிருந்தார்!

இருப்பினும் மொஹீந்தருக்கு நிரந்தர டெஸ்ட் இடம் கிடைக்கவில்லை. ஓர் இடைவெளிக்குப் பிறகு 1978ல் ஆஸ்திரேலியா சென்று கவாஸ்கருக்கு அடுத்தபடியாக சிறப்பாக ஆடிப் புகழ் பெற்றார் மொஹீந்தர் அமர்நாத் பரத்வாஜ். இங்கிலாந்தில் ஒரு வேகப் பந்து வீச்சு தலையைத் தாக்க மண்டை ஓட்டில் எலும்பு முறிவு ஏற்பட, அவருக்கு அதன் பின் வேகப் பந்து வீச்சைச் சந்திப்பது பிரச்சினையாக இருந்தது. இதனால் செலக்டர்கள் ஒதுக்கினர். மொஹீந்தர் சளைக்கவில்லை. அப்பாவுக்கேற்ற மகனாக வீரம் காட்டி ஆஸ்திரேலியா சென்று ஹெல்மட் அணியாமலே திரும்பத் திரும்ப வேகப் பந்து வீச்சைச் சந்தித்து பயத்தைப் போக்கிக் கொண்டார்.

உலகக் கோப்பையைப் பெறுவதில் அமர்நாத்தின் பங்கு அளவிட முடியாதது. செமி ஃபைனல், ஃபைனல் இரண்டிலுமே மேன் ஆஃப் தி மேட்சாக விளங்கி ஒவ்வொரு இந்தியக் குடிமகனின் பேரன்பையும் பெற்றுள்ளார்.

-ராம்நாராயண்

படம்: பாலாஜி; வண்ணம்: கல்பனா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

